# மாணிக்கவாசகர்

## காலமும் சமயமும்



பேராசிரியர்

ஆ. சிவலிங்கனார்

# மாணிக்கவாசகர்
# காலமும் சமயமும்

பேராசிரியர் ஆ. சிவலிங்கனார்

அருள்-சுடர் பதிப்பகம்
7, கடம்பாடி அம்மன் கோவில் தெரு,
வளசரவாக்கம், சென்னை - 600 087.

மாணிக்கவாசகர்
காலமும்—சமயமும்

பேராசிரியர் ஆ. சிவலிங்கனார்

முதல் பதிப்பு—1991


விலை : ரூ. 18-00

அருள்-சுடர் பதிப்பகம்
7, சடம்பாடி அம்மன் கோவில் தெரு,
வளசரவாக்கம்,
சென்னை - 600 087

அச்சிட்டோர் :
கவிக்குயில் பிரிண்டர்ஸ்,
47, நல்லதம்பி தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை-5.

திருக்கயிலாய பரம்பரைப் பெரிய மடம்
மயிலம்—பொம்மபுர ஆதீனம்
19-ஆம் பட்டம் குருமகா சந்நிதானம்
ஸ்ரீமத் சிவஞானபாலய சுவாமிகள் அருளிய

# ஆசியுரை

சிவன் எனும் நாமம் தமக்கேயுரிய செம்மேனி எம்மானாம் பரசிவத்தைப் பொருளாகக்கொண்ட சைவமும் தமிழும் தழைத்தினிதோங்க வேண்டும் என்ற அடிப்படையில் நம் திருமடத்தின் சார்பில் தோற்றுவிக்கப் பெற்ற தமிழ்க் கல்லூரியில் பல்லாண்டுகள் பேராசிரியராகவும் முதல்வராகவும் பணிபுரிந்த தொல்காப்பியச் செல்வர் சிவத்திரு ஆ. சிவலிங்கனார் அவர்கள் எழுதிய 'மாணிக்க வாசகர் வரலாறும் சமயமும்' என்ற நூலைத் திருவருளால் பார்க்க நேர்ந்தது.

சைவ சமயாசாரியர்கள் நால்வரையும் பொருளாகக் கொண்டு முதன் முதலாக நால்வர் நான்மணிமாலை என்ற நூலைப் பாடியருளி உலகவர்க்கீந்த கற்பனைக் களஞ்சியம் சிவப்பிரகாச அடிகள் நம் திருமடத்தைச் சார்ந்தவர். நம் திருமடத்தின் மரபையும் வீர சைவத் தத்துவ நுட்பங்களையும் நன்றாக அறிந்த பேராசிரியர் சிவலிங்கனார் அவர்கள் மாணிக்கவாசகரைப் பற்றிய பல்வேறு தலைப்புக்களில் 22 கட்டுரைகள் எழுதியுள்ளார்கள்.

மாணிக்கவாசகர் தேவார ஆசிரியர் மூவருக்கும் முந்தியவர் என்பதையும் அவர் வீர சைவர் என்பதையும் பல்வேறு சான்றுகளைக் காட்டி நிறுவியுள்ளார்கள். அறிஞர்களும் தத்துவ மேதைகளும் வீர சைவப் பெருமக்களும் இக்கருத்துக்களையெல்லாம் நடுநிலையில் நின்று சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

'சித்தாந்த சிகாமணி' என்னும் நூலை உரையுடன் பதிப்பித்த வீர சைவத்திரு நாகி செட்டியார் அவர்கள் மாணிக்கவாசகர் வரலாற்று வினா விடை என்றொரு நூல் எழுதி வெளியிட்டார்கள். அவர்கள் மாணிக்கவாசகரை வீர சைவர் என்றே காரணம் காட்டி நிறுவியுள்ளார்கள். இப்போது பதிப்பில் உள்ள திருவாசகத்தில் காணப்பெறாத —வீர சைவக் கொள்கையைத் தெளிவாக விளக்கக்கூடிய சில திருவாசகப் பாடல்களை அவர்கள் எடுத்துக் காட்டியுள்ளார்கள். பேராசிரியர் சிவலிங்கனார் எழுதுவது போன்றே பொய்யடிமை இல்லாத புலவர் என்ற திருத்தொண்டத்தொகை வரியானது மாணிக்கவாசகரையே குறிக்கும் என்று எழுதியுள்ளார்கள். இவைகளையெல்லாம் அறிஞர் உலகம் ஆராய்ந்து, தெளிந்த முடிவுகளை உலகுக்கு எடுத்து வழங்குவதில் தயக்கம் காட்டக்கூடாது.

'வீர சைவ முரசு' ஆசிரியர் நம் திருமடத்து அன்பர் கவிஞர் திலகம் திருவாசகனார் அவர்கள் வீர சைவ சமூக வளர்ச்சிக்குப் பலவாறு தொண்டு புரிந்து வருகின்றார்கள். அவர்களே இந்நூலைப் பதிப்பித்து வெளியிடுவது மிகவும் பாராட்டுக்குரிய தொண்டு ஆகும்.

பேராசிரியர் சிவலிங்கனார்க்கும் வீர சைவ முரசு ஆசிரியர் கவிஞர் திலகம் திருவாசகனார்க்கும் இட்டலிங்கப்பெருமான் எல்லாப் பேறுகளையும் தந்து வாழ்விக்க வேண்டும் என்று கூறி வாழ்த்துகின்றோம்.



ஸ்ரீமத் ஞானியார் மடாலயம், எட்டாம் குருநாதர்

ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக மெய்ஞ்ஞான
சிவாசாரிய சுவாமிகள் வழங்கிய

# ஆசியுரை

தண்டமிழின் மேலாந்தரத்தனவாகிய நூல்களில் ஒன்று திருவாசகம். ''திருவாசகத்திற்கு உருகாதார் ஒரு வாசகத்திற்கும் உருகார்'' என்ற தொடர்மொழியும் திருவாசகத்தின் சிறப்பை உணர்த்தும். திருவாசகம் பாடிய மாணிக்கவாசகர் சமயமும் காலமும் பற்றி ஆய்வாளர்கள் பலவாறு கூறுகின்றனர். ஆனால் எங்கள் மடாலய அன்பரும் பேராசிரியருமான முதுபெரும் புலவர் ஆ. சிவலிங்கனார் அவர்கள் மாணிக்கவாசகர் அருளிய திருவாசகம், திருக்கோவையார் ஆகிய இரு நூல்கள் கொண்டே அகச்சான்றுகளாக பல உண்மைகளை எடுத்துக்காட்டி மாணிக்கவாசகர் சமயநெறி வீர சைவநெறியே என்றும் அவர்தம் காலம் தேவார ஆசிரியர்கட்கு முற்பட்டது என்றும் மிகவும் தெளிவாக இக்கட்டுரை தொகுப்பு நூலில் விளக்கியுள்ளார். இந்நூலில் வந்துள்ள கட்டுரைகள் யாவும் ''வீர சைவ முரசு'' என்ற திங்களிதழில் வந்தனவே.

பேராசிரியர் ஆ. சிவலிங்கனார் அவர்கள் எங்கள் மடாலயத்திற்கு 1936-ஆம் ஆண்டு தொடங்கித் தொடர்பு கொண்டவர்கள். எங்கள் மடாலயத்து ஐந்தாம் குருநாதர் சிவத்திரு ஞானியார் அடிகளின் நேர்முக மாணவராவார். சிறந்த எழுத்தாளர், சொற்பொழிவாளர். மயிலம் ஸ்ரீலஸ்ரீ சிவஞானபாலய சுவாமிகள் தமிழ்க் கல்லூரியில் பேராசிரியராகவும், கல்லூரி முதல்வராகவும் இருந்து தமிழ்ப் பணிபுரிந்தவர். பல இலக்கண இலக்கிய

ஆராய்ச்சி நூல்கள் வெளியிட்டுள்ளார். பல திங்களிதழ்களில் பல ஆய்வுக் கட்டுரைகள் வரைந்துள்ளார். இப்போது வெளிவரும் இக்கட்டுரைத் தொகுப்பு நூல் வாயிலாக மாணிக்கவாசகர் சமயநெறியையும் கால நிலையையும் தக்க சான்றுகளால் ஆசிரியர் நிலைநாட்டுவதைத் தமிழுலகம் தெளிவாக அறிந்து வரவேற்கும் என்று நாங்கள் கருதுகின்றோம். பேராசிரியர் ஆ. சிவலிங்கனார் அவர்கள் இதுபோன்று பல அரிய ஆராய்ச்சிப் பணிகளைத் தொடர்ந்து தமிழுலகிற்கு ஆற்றி வருமாறு எங்கள் உபசனா மூர்த்தியாகிய ஸ்ரீ வல்லீதேவசேனாசமேதராகிய முருகப்பெருமான் திருவருளும், எங்கள் மகா குருமூர்த்திகளின் திருவருளும் எல்லா நலங்களையும் தந்து நல்வாழ்வு அருளுவதாகுக.

# அணிந்துரை

முனைவர் வை. இரத்தினசபாபதி
பேராசிரியர் மற்றும் தலைவர், சைவ சித்தாந்தத்துறை
சென்னைப் பல்கலைக் கழகம்

திருவருளும் குருவருளும் துணை நிற்க, கருவிலே திருவுடையராகப் பிறந்தவர் என்னுடைய பேராசிரியப் பெருந்தகையாகிய 'ஆசி' ஆ. சிவலிங்கனார் அவர்கள்.

என்னுடைய கல்வி வாழ்க்கையிலும் தனி வாழ்க்கையிலும் அன்றும் இன்றும் என்றென்றும் தனியிடம் பெற்று என்னை வழி நடத்திச் சென்ற பேராயர் அவர். என்னுடைய தீட்சாகுருவை இன்னார் என யானறியுமாறு காட்டி, யான் அருள் வாழ்வில் தலையெடுத்துச் சிறக்குமாறு என்னை வழி நடத்திய வித்தகர் ஆவார் அவர்.

தன் மாணாக்கன் என்ற வகையில் என்னைச் சீராட்டிப் பாராட்டி வளர்த்த பெருந்தகை, தொல்காப்பியக் கடலை நிலை கண்டுணர்ந்த ஆசான், எளிய நடையில் அரிய கருத்துக்களை வழங்கும் ஆற்றல் பெற்ற அருங்கலைக்கோன், ஆயுந்தொறும் இனிதாய்ப் புதுப்புது நயம் பயக்கும் தமிழே போன்று எழுதுந்தோறும் புதுப்புது செய்திகளை—ஆய்வியல் முடிவுகளை வெளிப்படுத்தும் ஆற்றலைத் தமக்கே உரித்தாகப் பெற்ற சான்றோன் எனத் தன்னேரில்லாத் தமிழ் மணம் பூத்துக் குலுங்கும் தமிழ்ச் சோலையாக நின்ற பேராசிரியர் ஆ. சிவலிங்கனார் அவர்கள் பல்வேறு கட்டுரைகளாக வீர சைவ முரசில் வெளிவந்த கருத்துக் கருவூலங்களே இப்போது 'மாணிக்கவாசகர் காலமும் சமயமும்' என்ற பெயரில் நூலாக வெளி வருகிறது.

அகத்தியர் பற்றியும் சிலப்பதிகாரம் பற்றியும் பல்வேறு ஆய்வுக் கருத்துக்களை அறிஞர் உலகிற்கு வழங்கி எழுத்

தாளர் உலகில் தனக்கெனத் தனியிடம் பெற்றுத் திகழும் என் ஆசான் அவர்கள் சமய உலகிற்கு வழங்கும் தனிக் கொடையே இந்நூல்.

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகியோர் வரலாறுகளைத் தத்துவப் பின்னணியுடன் எழுதி வெளியிட்ட நான் மாணிக்கவாசகர் பற்றிய ஆய்வைத் தொடங்கவும் வெளியிடவும் இன்னும் குருவருளும் திருவருளும் துணை செய்யவில்லை. இந்நிலையில் பேராசிரியப் பெருந்தகையவர்கள் மணிவாசகரைப் பற்றிய மணியான 22 கட்டுரைகளை ஆய்வியல் நெறிமுறை வழுவாது எளிய நடையில் எழுதியுள்ளார்கள்.

பேராசிரியர் 'ஆசி' அவர்கள் என்னைப் பெருமைப் படுத்தி எழுதுவதால் யான் இன்னும் எழுத்துலகில் வாழ்ந்து வருகிறேன். யான் கூறிய அல்லது எழுதிய செய்திகளாகப் பலவற்றைக் கூறி, அவற்றை மேலும் விளக்கி எழுதியிருப்பதைப் பார்த்தபோது யான் உள்ளம் மிகமிக நெகிழ்ந்து போனேன்.

'கேட்டறியோம் உன்னைக் கண்டறிவாரை'' (பக். 9) என்ற பகுதியை உள்ளிட்ட விளக்கம் இவ்வகையைச் சார்ந்தது.

''கோகழி'' என்பது பற்றிப் பேராசிரியர் 'ஆசி' அவர்கள் கொடுத்த விளக்கம் பன்முறை படித்து இன்புறத் தக்கது. தவத்திரு ஞானியாரடிகளிடத்தில் பயின்றும், மயிலம் 18-ஆம் பட்டம் சிவஞானபாலய சுவாமிகளிடத்தில் வளர்ந்தும், சிவஞானபாலய சுவாமிகள் தமிழ்க் கல்லூரியில் பல்லாண்டுகள் பாடம் பயிற்றியும் பெற்ற அனுபவ வன்மையாலும் அருள் வளத்தாலும் பல்வேறு ஆய்வுச் செய்திகளை மிக எளிமையாக வழங்கியுள்ளார்கள். அவ்வகையில் 'தில்லைவாழ் அந்தணர்' பற்றிய கட்டுரை முடியணியாய் அமைவது ஒன்று.

மறைமலையடிகளின் வழி நின்று, மணிவாசகரை மூவர்க்கும் முந்தியவர் எனக் காட்டும் பேராசிரியப் பெருந்தகை அவர்கள் மாணிக்கவாசகர் வீர சைவரே என்பதை இதுவரை வெளிவராத பல சான்றுகள் காட்டி விளக்குவது ஆய்வாளர்கள் சிந்திக்க வேண்டிய ஒன்று.

''தடங்கையின் நெல்லிக்கனியெனக் காயினை'' என்ற வரிக்கும், ''உங்கையிற் பிள்ளை உனக்கே அடைக்கலம்'' என்பதற்கும் பேராசிரியர் கொள்ளும் பொருள் விளக்கங்கள் நாம் இத்தனை நாள் இப்பொருளை எண்ணவில்லையே என்று அறிஞர் பலரும் நாணித் தலைகுனியுமாறு செய்யும் நயப்புடையன.

''தேவியாருடன் இருந்தே பற்றற்ற நிலையில் இருத்தல் சிவஞானியில் இயல்பு'' (பக். 48) என்பதற்குச் சாந்தலிங்க அடிகளார் வாழ்வினை எடுத்துக் காட்டியிருப்பது நெஞ்சத்தை நெகிழ வைக்கும் எடுத்துக்காட்டு.

''மாணிக்கவாசகர் காலமும் சமயமும்'' என்ற இந்நூற் கட்டுரைகளை என் ஆசிரியர் எழுதும்போது அவர்தம் ஊனக் கண்கள் நல்லமுறையில் செயலாற்றவில்லை. அகக் கண்ணாகிய அருட்கண் விழித்த நிலையில் நினைந்து நினைந்து சிந்தித்தவைகளைப் பிறரிடம் சொல்லி எழுதச் செய்த திருவருட் பாங்கினால் விளைந்தவைகள். அதனால் திருவருள் நோக்கத்தின் வெளிப்பாடு அனைத்துக் கட்டுரைகளிலும் வெளிப்பட நின்றிருத்தலை இந்நூலைப் படிப்போர் நன்குணர்வர் என்பது வெளிப்படை.

நூலாசிரியரைப் போலவே பதிப்பாசிரியர் கவிஞர் திலகம் திருவாசகன் அவர்களும் என் வாழ்வில் ஊடுருவி நின்று உள்ளங்கவர்ந்த பெருந்தகை. உழைப்பால் உயர்ந்த உத்தமராக நிற்கும் கவிஞர் திலகம் திருவாசகன் அவர்கள் தம்முடைய வருமானத்தில் பெரும் பகுதியை 'வீர சைவ முரசு'க்காகவும் நல்ல நூல்களை வெளிப்படுத்துவதற்காக

வும் செலவு செய்து வருகிறவர்கள், அயராது உழைக்கும் உழைப்பால் திருநாவுக்கரசு என நின்ற நம் கவிஞர் திலகம் அவர்கள் உள்ளம் உருக்கும் கவிதையால் திருவாசகன் ஆனார்கள். கற்பனை வளத்தை இயற்கைப் புலமையாகக் கருவிலே பெற்ற திருவுடைய திருவாசகன் அவர்கள் நாடு போற்றும் சித்தர் மரபிலே வந்த சீர்மை வித்தகர் ஆவர். ''தனக்கு மிஞ்சித்தான் தருமம்'' என்ற பழமொழியைத் தவறு என்று காட்டி, தம் வாழ்வியலால், பெரியபுராண நாயன்மார்களின் வரலாற்று வாய்மையால் புதிய விளக்கம் கண்ட, செயல்முறையிற் காட்டிய பெருந்தகையே கவிஞர் திலகம் திருவாசகன் அவர்கள்,

கடல் கடந்த நாடுகளெல்லாம் எம் கவிஞர் எம் கவிஞர் எனப் போற்றும் கவிஞர் திலகம் திருவாசகன் அவர்கள் பதிப்பாசிரியப் பணியேற்று வெளிப்படுத்தும் பெருமைக் குரிய இந்நூல் தமிழ் கூறும் நல்லுலகத்தவராலும் தத்துவ மேதைகளாலும் வரவேற்றுப் புகழ் பாடும் பெருமையுடை யது என மணம் பரப்பும் பெருமையுடையது.

மாணிக்கவாசகர் பற்றிய சிந்தனையில் இந்நூல் ஒருவகைப் புதுமையை உண்டாக்கும் என்பதில் ஐயமில்லை. தத்துவப் பெருந்தகைகளும் சமய வல்லுநர் களும் இந்நூலைக் காய்தல் உவத்தல் இன்றி, நடுநிலைமை யில் நின்று சிந்திக்குமாறு வேண்டி முடிக்கின்றேன்.

வாழ்க மணிவாசகம்
வளர்க திருவாசகனார் தொண்டு.

சென்னை-5, இங்ஙனம்

28—5—1991 வை. இரத்தினசபாபதி.

# பதிப்புரை

திருவாசகத்தைக் கேட்டால் ''பொல்லா விலங்குகளும் மெய்ஞ்ஞான நாட்டமுறும்'' என்பார் வள்ளல் இராமலிங்கப் பெருமான். அத்தகைய மெய்ஞ்ஞானத் தேன்பிளிற்றும் திருவாசகத்தைப் பெற்றதால் ஆன்மீக உலகில் தமிழகம் தலைமையிடம் பெறுகின்றது. திருவாசகத்தை மணிவாசகர் மொழிய இறைவனே எழுதினான் என்ற செய்தியே அதன் சிறப்பினை விளக்கப் போதுமானதாகும். நரி திருவாசகத்தைக் கேட்ட பின்னரே பரியாகி இருக்கும் என்பது என் எண்ணம்! அருள் மனத்தால் கருணை கொஞ்சும் திருவாசகத்தைத் தந்த மணிவாசகர் பெருமான் தழுவிய சமய நெறியும், அவர் வாழ்ந்த காலமும் அறிஞர் உலகிடையே ஒரு பட்டிமண்டபப் பொருளாக இதுகாறும் விளங்கி வந்தது. தொல்காப்பியச் செம்மல், பேராசான் ஆ. சிவலிங்கனார் அவர்கள் நடுநிலையோடு யாத்திருக்கும் ''மணிவாசகர் காலமும் சமயமும்'' என்ற இந்த அரிய ஆய்வுக் களஞ்சியத்தின் வாயிலாக அதற்கு ஒரு நல்ல தீர்ப்புக் கிட்டியிருக்கிறது என்பதை அறுதியிட்டுக் கூறலாம்.

இதுவரை ''வீரசைவ முரசு'' என்ற திங்களிதழுக்கு அணிகலன்களாக விளங்கிவந்த மணிவாசகரைப்பற்றிப் பேராசிரியர் சிவலிங்கனார் எழுதி வந்த கட்டுரைகள் இந்நூலின் வாயிலாகத் தமிழ்த்தாயின் ஆன்மீகப் பொலிவுக்கு மேலும் மங்கலம் சேர்க்கப் போவது திண்ணம். அருள்-சுடர் பதிப்பகத்தின் தவப்பேறே அதற்கு இந்நூலை வெளியிடக் கிடைத்த வாய்ப்பு!

அரிய ஆய்வு நூலுக்கு வாழ்த்துரை வழங்கிப் பெருமை நல்கும் பொம்மபுரம் மயிலம் ஆதினம் திருவார்

திரு. சிவஞான பாலய சுவாமிகள் (19 ஆவது பட்டம்) அவர்களின் பொன்னார் திருவடிகளுக்கும், திருப்பாதிரிப் புலியூர் திருக்கோவலூராதீனம் ஞானியார் மடாலயம் திருப்பெருந் திரு. சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகளுடைய தாள் மலர்களுக்கும் என்னைப் பல்லாற்றாலும் ஊக்குவித்து இந்நூலைத் தமிழ் கூறும் நல்லுலகம் காண வழி செய்த சித்தாந்தவித்தகர் டாக்டர் வை. இரத்தின சபாபதியார் M. A., B. O. L. Ph. D. அவர்களின் மாணிக்கப் பதங்களுக்கும் என் சென்னி என்றும் இருப்பிடமாகும்.

தவத்திரு. ஞானியாரடிகளின் தலைமாணாக்கர் பயிலம் ஆதீனப்புலவர், சிவநெறிப்புலவர், இலக்கணச் செம்மல், தொல்காப்பியச் சித்தர், பேராசிரியர் சிவலிங்கனார் இந்நூலை வெளியிட அனுமதி கொடுத்தமைக்கு நன்றி கூற இனிப் புதிய சொல்தான் பிறந்து வரவேண்டும்!

அருள்-சுடர்பதிப்பகம்
7 கடப்பாடி அம்மன்
கோயில் தெரு,
வளசரவாக்கம்
சென்னை - 600 087

அன்பன்,

ஜெ. சிவராமன்

8-7-1991

# முன்னுரை

மாணிக்கவாசகர் அருளிய திருவாசகச் சிவபுராணத்தின் மூன்றாம் வரியாகிய ''கோகழியாண்ட குருமணி வாழ்க'' என்பதில் உள்ள கோகழியைப் பற்றி, மதிப்புக்குரிய மு. அருணாசலம் பிள்ளையவர்கள் எழுதிய கட்டுரையைப் படிக்க நேர்ந்தது. அதில் அவர்கள் கோகழி என்பது, சீகாழி, திருவாவடுதுறை என்னும் ஊர்களைக் குறிக்கலாம் எனும் பலர் கருத்துரைகளை மறுத்து, அது திருப்பெருந்துறைக் கோயிலைக் குறிக்கும் என்று முடிவு கட்டினார்கள். அதுபற்றி மேலும் ஆராய்ந்தபோது கோகழி என்பது திருப்பெருந்துறையின் ஒரு பகுதியைக் குறிக்கலாம் என்ற முடிவுக்கு வந்தேன்.

பெல்லாரியைச் சார்ந்த கோளகிரி என்பதுவே கோகழியாகலாம் என்றும், அக்கோளகிரியின் வீர சைவ சமயத் தலைவரின் வழித்தோன்றல்களால் தமிழ்நாட்டில் ஏற்படுத்தப்பட்ட வீரசைவத் திருமடங்களுள் கோகழி என்னும் இடத்தும் ஒரு மடம் அமைந்திருக்க வேண்டும் என்றும், அம்மடத்தின் தலைவரே மாணிக்கவாசகரின் குருமணியாகலாம் என்றும் என் கருத்துகளை எழுதினேன். (கோகழி எனும் கட்டுரை பார்க்க).

அதன் பின்னர் மாணிக்கவாசகர் வீரசைவரே என ஒரு எண்ணம் உடையவனானேன். வீரசைவர் என்பதற்குத் திருவாசகத்தில் சான்றுகள் காணத் தொடங்கினேன் மறைமலையடிகள் தாம் ஆராய்ந்து எழுதிய ''மாணிக்கவாசகர் வரலாறும் காலமும்'' எனும் நூலில் மாணிக்கவாசகர் வீர சைவரே என அறுதியிட்டதையும் அவர் காலம் கி பி. மூன்றாம் நூற்றாண்டு என வரையறுத்ததை

யும் கண்டு வியந்து, அவர் கொள்கை வழித் திருவாசகத்தில் அகச்சான்றுகள் காண முயன்றேன்.

அம்முயற்சிக்குப் பெரிதும் ஊக்கமளித்தவர் வீர சைவ முரசு எனும் திங்கள் இதழின் நிறுவனரும் ஆசிரியருமாகிய வீரசைவச் செம்மலர் ஆ. திருவாசகன் ஆவர். அவர்தம் விருப்பப்படியே வீரசைவ முரசில் மாணிக்கவாசகர் வீரசைவர் என்பதற்கான கட்டுரைகளும் மாணிக்கவாசகர் கி. பி. மூன்றாம் நூற்றாண்டினர் என்பதற்கான கட்டுரைகளும் அவ்வப்போது எழுதி வரலானேன்.

இன்று அக்கட்டுரைகளைத் தொகுத்து ''மாணிக்க வாசகர் சமயமும் காலமும்'' என்னும் நூலாக வெளியிட்டுள்ளார்கள் ஆ. திருவாசகன் அவர்கள்.

இந்நூல், அவ்வப்போது வந்த கட்டுரைகளின் தொகுப்பாதலின், ஒரு தொடர்ச்சியாக இல்லாததோடு ஒரே கருத்து அடிக்கடி வந்தும் காணப்படும். இதனை அறிஞர் உலகம் பொறுக்க வேண்டுவன.

இந்நூலை உருவாக்கிய வீரசைவ முரசு ஆசிரியர் அவர்கட்கு என்றும் நன்றிக் கடப்பாடுடையேன்.

இந்நூற் கட்டுரைகளுக்கு அவ்வப்போது உற்ற துணையாக இருந்து ஆக்கமான கருத்துகளையும் வழங்கியவர், சென்னைப் பல்கலைக் கழகச் சைவ சித்தாந்தத் துறைத் தலைவரும் பேராசிரியருமாகிய டாக்டர் வை. இரத்தினசபாபதி அவர்கள் ஆவார்கள். இந்நூலுக்குச் சிறந்த அணிந்துரையும் வழங்கியுள்ளார்கள். யான் எட்டாண்டு காலம் (1979—1987) சென்னை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் தொல்காப்பிய உரைவளப் பதிப்பினை மேற்கொண்டிருந்தபோது என்னைத் தம்முடனேயே இருத்திப் போற்றிவந்த டாக்டர் வை. இரத்தினசபாபதி அவர்களுக்கும், அவர்தம் துணைவியாருக்கும் என் நலத்தினைப் பெரிதாகப் புரந்து வந்தவரும் என்

மூத்த மகளாக என்னால் கருதப் பெற்றவரும் ஆகிய வாசந்தி என்னும் வசந்தகுமாரி அவர்களுக்கும் என்றென்றும் நன்றி கடப்பாட்டினன் ஆவேன்.

யான் படித்த இடம் திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் மடாலயம், படிப்பித்த இடம் மயிலம் பொம்மபுர ஆதீன மடாலயம். இவ்விரண்டு மடாலயத்துச் சந்நிதானங்களுக்கும் என் வணக்கம்.

கட்டுரைகள் எழுதுவதற்கு மயிலம் சிவஞான பாலய சுவாமிகள் தமிழ்க் கல்லூரி நூல் நிலையம் பெரிதும் உதவியது. கல்லூரி முதல்வர் டாக்டர் து. கார்த்திகேயன் M. A., B T., Ph D. அவர்களுக்கும், நூலகர் திரு. க. நக்கீரன் M. A., L. B. I. S. அவர்களுக்கும் நன்றியுடையேன்.

கட்டுரைகளை அவ்வப்போது படியெடுத்துதவிய என் மருமகள் விசயலட்சுமி முருகவேலனை வாழ்த்துகிறேன்.

தாய்தண்டமிழ் நாட்டிற்பெருந் தக்கோர் பலர் முன்னே
போய்தங்குதற் கேற்றம் மிகப் போற்றப்பெறும் கல்வி
ஏய்தந்துநன் னெறிசேர்ந்திட என்னையருள் செய்த
தாய் தந்தையர் தாட்டாமரை தாழாநிறைஞ் சுவனே.

ஆ. சிவலிங்கனார்
மயிலம்.

# மாணிக்கவாசகர் வரலாற்றுச் சுருக்கம்

மாணிக்கவாசகர், பாண்டிவள நாட்டில் வையையாற்றங்கரையில் உள்ள திருவாதவூர் என்னும் ஊரில் தோன்றியவர். அவர்தம் பெற்றோர் வீர சைவர். அவர் இயற்பெயர் அறியக்கூடவில்லை. திருவாதவூரிற் பிறந்தமையால் அவரைத் திருவாதவூரர் என அக்காலத்தார் அழைத்தனர்.

திருவாதவூரர் இளமையில் கற்க வேண்டிய நூல்களைக் கசடறக் கற்றார். கற்றன உலகியல் நூல்களும் ஞான நூல்களும் ஆதலின் அவற்றின் வழி ஒழுகலானார். உரிய காலத்தில் திருமணம் செய்து இல்லறத்தை நல்லறமாக்கிச் சிற்றின்பத்திலும் திளைத்தவராய்ச் சிவஞானப் பேரின்பத்திலும் நாட்டம் உடையவராய் இருந்தார்.

அக்காலத்தில் மதுரையிலிருந்து ஆண்டுவந்த பாண்டிய மன்னன், அவர்தம் உலகியலறிவின் திறம் சிலர் உரைக்கக் கேட்டு, அவரைத் தம் அமைச்சராக்கி மகிழ்ந்தான். அமைச்சுத் தொழிலைத் திறம்படச் செய்து வந்த போதும் பேரின்பத்திலும் நாட்டம் இருந்து வந்தது.

அக்காலத்தில் சில ஒற்றர் பாண்டிய மன்னனிடம், 'திருப்பெருந்துறையைச் சார்ந்த கடற்கரையில் மிலேச்ச நாட்டு ஆரியர் உயர்ந்த குதிரைகளைத் திரள் திரளாகக் கொண்டு வந்து குவித்துள்ளனர்' என்று கூறினார்கள். மன்னனும் மகிழ்ந்து அமைச்சராகிய திருவாதவூரரிடம் திருப்பெருந்துறை சென்று குதிரைகளை வாங்கி வருமாறும் வேண்டிய பொன்னும் பொருளும் கருவூலத்திலிருந்து கொண்டு செல்லுமாறும் கூறினான்.

திருவாதவூரரும் குதிரை வாங்கி வரப் பரிவாரங்களுடன் மதுரைச் சொக்கநாதப் பெருமானையும் அங்கயற்கண்ணியம்மையையும் வழிபட்டுத் திருப்பெருந்துறை நோக்கிப் புறப்பட்டார்.

அக்காலத்தில் திருப்பெருந்துறை ஒரு பெருநகரமாக விளங்கியிருந்தது. அதைச் சார்ந்த ஒரு சோலை சூழ்ந்த ஓரிடம் கோகழி என்னும் பெயருடன் விளங்கியது. திருவாதவூரர் அதனை நெருங்கியபோது திருவருளால் உலகப்பற்று சிறிது சிறிதாக மங்கிவர இறையருட்பற்று பொங்கி வந்தது. கோகழிப் பொழிலில் அடியவர் புடைசூழக் குருந்தமர நிழலில் ஓர் அந்தணர் இருப்பதைக் கண்டார். உள்ளம் அவர்பால் ஈர்ப்பத் தம்மை மறந்து சென்று வணங்கினார். அவ்வந்தணர், திருவாதவூரரை ஆட்கொள்வதற்கென்றே வந்த இறைவனாதலின், அவர்க்குத் தம் கையில் உள்ள திருநீற்றை அணிவித்துத் தம் திருவடிகளை அவர்தம் சென்னிமிசைச் சூட்டிச் 'சிவாயநம' எனும் ஐந்தெழுத்து மந்திரத்தை ஓதி ஆட்கொண்டார். அத்துடன் திருவாதவூரர் அணிந்திருந்த சிவலிங்கத்தில் தம்மை இருத்தி அவர் திருக்கரத்தில் எழுந்தருளச் செய்தார். தம்மைத் தந்து அவரைத் தாம் ஆட்கொண்டார். இதைத் திருவாதவூரரே, ''தந்தது உன் தன்னைக் கொண்டது என் தன்னை'' என ஒரு பாடலில் குறிப்பிடுகின்றார். (கோயில் திருப்பதிகம் - 10) அன்று முதல் அவர் தாம் வந்த காரியத்தையும் மறந்தவராய் அவ்வந்தணக் குரு வழிபாட்டிலேயே ஈடுபட்டிருந்தார். குருவானவர் அவரைத் தம்முடன் இருந்த அடியவர் கூட்டத்துள் ஒருவராக விளங்கச் செய்தார். தம்மைப் பலவாறு பாடிய திருவாதவூரரை 'மாணிக்கவாசகர்' என்றழைத்தார். அதுமுதல் அவர் மாணிக்கவாசகர் ஆனார். கோகழியில் மாணிக்கவாசகரை ஆட்கொண்ட குருமணியானவர், மாணிக்கவாசகரை நோக்கி, ''நீ நம்மைத் தில்லையில் வந்து காண்க'' எனச் சொல்லி அடியவரோடு மறைந்தார்.

மாணிக்கவாசகர் தாம் கொண்டு வந்த பொருள்களை யெல்லாம் சிவனடியார்கட்கே செலவு செய்து தம்மை மறந்திருந்தார். உடன்வந்த பரிவாரத்தார் அது கண்டு பாண்டிய மன்னனிடம் சென்று கூறினர். மன்னனும் மாணிக்கவாசகருக்குக் ''குதிரை வாங்கி வருமாறு ஓலை விடுத்தான். ஓலையைக் கண்ட மாணிக்கவாசகர் தம் நிலை திரும்பியவராய்த் தம் பிழையை உணர்ந்து குருமணியை நினைந்து ''என் செய்வேன்'' என அழுது வேண்டினார். குருமணியும், விரைவில் ஆவணிமூலத்தன்று குதிரை வரும் எனச் சொல்ல வேண்டிப் பாண்டிய மன்னனை அடையும்படிக் கூறினார். அவரும் அவ்வாறே பாண்டிய மன்னனிடம் சென்று கூறினார். நாட்கள் பல கடந்தன. ஒற்றர் சிலர் பாண்டிய மன்னனிடம், ''மாணிக்கவாசகர் கூறியது பொய், திருப்பெருந்துறையில் குதிரைகளே இல்லை'' என்றனர். மன்னனும் ஒற்றரை அனுப்பிக் குதிரைகள் திருப்பெருந்துறையில் இல்லையென்பது அறிந்து, அவரைச் சிறைப்படுத்தினான். அவர்தம் குருமணியை நினைந்து வருந்தினார். குருமணியாகிய சிவபெருமான் நரிகளைக் குதிரைகளாக்கித் தன்னை ஓர் குதிரைச் சேவகனாய்ப் புனைந்து கொண்டு மதுரை சேர்ந்தான். குதிரை வரவு கண்டவர் மன்னனிடம் தெரிவிக்க, மன்னனும் மகிழ்ந்து மாணிக்கவாசகரைச் சிறையிலிருந்து விடுவித்து அவரைச் சிறப்பாகப் புகழ்ந்து போற்றினான். குதிரைகளைப் பெற்று அவற்றை உரிய இடங்களில் கட்டி வைக்கச் செய்தான். செய்தான். அன்றிரவு அக்குதிரைகள் எல்லாம் நரிகளாய் ஊளையிட்டுத் தொல்லை தந்தன. மன்னன் சினம் கொண்டு மாணிக்கவாசகரை மீண்டும் சிறைப்படுத்தினான். அவரை வையை மணலில் நிறுத்திக் கடும் வெய்யிலில் துன்புறுமாறு செய்தான்.

சிவபிரான் கடிய வெய்யிலின் கொடுமையால் துன்புறும் மாணிக்கவாசகரைத் துன்பத்தினின்றும் நீக்க வேண்டிக் கங்கையை வையையில் பெருக்கெடுத்து ஓடச் செய்தான்.

வையை பெருக்கெடுத்து இருகரைகளையும் உடைத்து ஓடி மதுரையையே அழிக்கும் நிலையை அடைந்தது. அதுகண்ட மன்னனின் கொடிய ஏவலர்கள், மாணிக்கவாசகரைத் துன்புறுத்துவதை விட்டு ஓடினர். மாணிக்கவாசகரும் வையைக் கரையேறி இறைவன் திருக்கோயிலடைந்து தொழுவாராயினர்.

வையையாறு பெருக்கெடுத்து மதுரையை அழிக்கத் தொடங்கியபோது மன்னன், அதன் இருகரைகளையும் உயர்த்தி வெள்ளப் பெருக்கை நிறுத்த வேண்டும் என்று எண்ணி, அதற்கு 'வீட்டிற்கு ஓர் ஆள் வேலைக்கு வந்து வையைக் கரையைக் கட்டி வெள்ளப் பெருக்கை அடைக்க வேண்டும்' என்று கூறி, ஒவ்வோர் வீட்டார்க்கும் அடைக்கவேண்டிய இடம் அளந்துவிடச் செய்தான். மதுரை நகர மக்கள் அரசாணையை மேற்கொண்டு வையைப் பெருக்கை அடைக்க முற்பட்டனர்.

மதுரையில் இருந்து பிட்டு வாணிகம் செய்து பிழைத்து வந்தவள் ஒரு முதியவள். அவளுக்கு அவளைத் தவிர வேறு யாரும் இல்லை. செம்மனச் செல்வியாகிய அவளுக்கும் வையைக் கரையடைக்க இடம் ஒதுக்கப்பட்டது. தன்னால் அது முடியாததால் கூலியாள் கிடைப்பானோ என ஏங்கி நின்றாள். இறைவனை வேண்டி நின்றாள். இறைவன் கூலியாளாக வந்து, தான் கரையடைப்பதாகவும், அதற்குக் கூலியாகப் பிட்டு அளிக்கவேண்டும் என்றும் கூறி வேலையை மேற்கொண்டான். வேலை செய்யாமல் வேலை செய்வோரையும் செய்யவிடாமல் விளையாடிக் கொண்டிருந்தான். கரையடைப்பு வேலையைப் பார்த்துக்கொண்டு வந்த மன்னன், பிட்டு வாணிச்சியின் கரை யடைபடாமை கண்டு, அவளுக்காக வேலைக்கு வந்த கூலியாளை அழைத்துத் தன் கைப்பிரம்பால் ஓரடி அடித்தான். அவ்வடி கூலியாள்மேல் படாமல், பாண்டியன் முதுகிலும் மாணிக்கவாசகர் முதுகிலும் மற்றையாவர் முதுகிலும்

பட்டது. வேலைக்கு வந்த கூலியாளும் மறைந்தான். கரையும் அடைபட்டது. இந்நிகழ்ச்சி யாவரையும் வியப்பில் ஆழ்த்தியது. பாண்டியன் இது இறைவன் திருவிளையாடலே என உணர்ந்து மாணிக்கவாசகரைக் கோயிலில் கண்டு வணங்கித் தன் பிழை பொறுக்க வேண்டினான். மாணிக்கவாசகர் அப்போதே துறவு பூண்டு மதுரையை விட்டுத் திருப்பெருந்துறைக்குப் புறப்பட்டார்.

திருப்பெருந்துறை சென்று, முன்பு தம்மையாட்கொண்ட கோகழிப் பொழிலையடைந்து, குருந்துமர நிழலில் குருமணியை அகக்கண்ணால் கண்டு வணங்கினார். அவ்வாறான நாள்களில் ஒருநாள் இறைவன் கனவில் தோன்றி, ''இங்குள்ள பொய்கையில் பேரொளி தோன்றும்- அடியவர் அதில் மூழ்குவர்; நீ மூழ்காமல் நின்று அப்பேரொளியை வணங்கிப் பின்னர்த் தில்லைக்கு வருக'' என்றான். அதன்படியே பொய்கையில் பெருந்தழல் தோன்ற அடியவர் பலர் அதில் மூழ்கச் சில அடியவர் தொழுது நின்றனர். பின்னர் மாணிக்கவாசகர் அவ்விடம் விட்டுப் பிரியா நினைவில் பிரிந்து உத்தரகோசமங்கையடைந்து ஆங்கும் பேரொளிப் பிழம்பு தோன்றக் கண்டு வணங்கி, சிவபிரான் எழுந்தருளும் திருவிடங்களைக் கண்டு தொழச் சென்றார். திருவண்ணாமலை, திருக்கழுக்குன்றம் முதலிய இடங்களையும் தொழுதார். முடிவில் திருத்தில்லையையடைந்தார்.

தில்லையில் ஈழநாட்டிலிருந்து வந்த புத்தர்களை வாதில் வென்று, ஈழவேந்தனின் ஊமை மகளைப் பேச வைத்துச் 'சிவபிரானே முழுமுதற் கடவுள்' என்பதை நிலைநாட்டி அங்கேயே இறைவனை வழிபட்டிருந்தார்.

ஒருநாள், சிவபிரான் அடியவர் வேடத்தில் வந்து மாணிக்கவாசகரிடம் அவர் அவ்வப்போது அருளிச் செய்த பாடல்களை அவர் கூறக் கேட்டுத் தானே தன் கைப்பட

ஓலையில் எழுதிக் கொண்டான். பின்னர்க் 'கோவை பாடுக' எனக் கூறித் திருக்கோவையார் என்ற அகப் பொருட்டுறையமைந்த நூல் ஒன்று பாடச் செய்து எழுதிக்கொண்டு மறைந்தருளினான்.

தில்லை நடராசப் பெருமானை நாட்பூசை செய்ய வேண்டித் திருக்கதவம் திறந்த அந்தணர் வாயிற்படியில் ஓலைச்சுவடி இருக்கக் கண்டார். அதனை ஊரவர்க்கு அறிவித்து அவர்களுடன் போந்து, அச்சுவடியினைப் பார்த்து, அதன்கண் திருவாசகமும், திருக்கோவையாரும் எழுதிய முடிவில், ''திருவாதவூரன் பாட அழகிய சிற்றம் பலம் உடையான் எழுதியவை'' என இருக்கக்கண்டு வியந் தனர். அப்பாடல்களின் பொருளை மாணிக்கவாசகர் மூலமே கேட்டு அறிய வேண்டி யாவரும் அவரை அணுகி வேண்டினர். மாணிக்கவாசகரும் இறைவன் திருவருளை வியந்து யாவரையும் நடராசப் பெருமான் முன்னிலையில் அழைத்துச் சென்று 'இந்நூல்களின் பொருள் இவனே' எனப் பெருமானைக் காட்டியபோது ஓர் பேரொளிப் பிழம்பு தோன்ற அதில் தாம் சென்று மறைந்தருளினார்.

# பொருளடக்கம்

# 1. மாணிக்கவாசகர் காலம்

மாணிக்கவாசகர் வீரசைவர் என்பது வீரசைவ உலகம் கூறும் உண்மையாகும். அதற்கு ஆதாரம் மாணிக்கவாசகர் பாடல்களில் சமயச் சார்பான கருத்துகள் காணப்படுவதே என்பர். பேராசிரியர் சி. துரைசாமி அய்யர், பேராசிரியர் திரு. அடிகளாசிரியர், பேராசிரியர் வீ. குமாரசாமி அய்யர் எனும் மூதறிஞர்களும், வீரசைவம் பற்றித்தமிழ் உலகுக்கு விளக்கம் தந்த *டாக்டர் வை. இரத்தினசபாபதி போல் வாரும் மாணிக்கவாசகர் பாடல்களுக்கு வீரசைவ சமயச் சார்பாகப் பொருளுரைப்பர் இறைவனை உடலிடம் கொண்டவனாகக் கூறும் இடம் தவிர மற்றைய இடங்களில் வெளிப்படையாக மாணிக்கவாசகர் வீரசைவ சமயக் கோட்பாடுகளைக் கூறுவில்லை.

அங்கத்தலம் இலிங்கத்தலம் முதலிய சடுத்தல மரபுச் சொற்களையோ பஞ்சாட்சரம் விபூதி உருத்திராக்கம் முதலிய அட்டாவரண மரபுச் சொற்களையோ மணிவாசகர் கூறவில்லை. நமச்சிவாய சிவாயநம என ஐந்தெழுத்து

* விளக்கத்தைச் சென்னைப் பல்கலைக்கழகப் பொன்விழா வெளியீடாகிய 'வீரசைவம்' எனும் நூலில் (1977) காண்க.

களையும் பல இடங்களில் திருநீற்றையும் குறிப்பிடினும் உருத்திராக்கம் பிரசாதம் என்பனவற்றைக் கூறவில்லை.

சடுத்தலக் கோட்பாடும் அட்டாவரணக் கோட்பாடும் வீரசைவர்க்கு இன்றியமையாதனவாக இருக்க மணிவாசகர் குறிப்பிடாதது ஏன்?

வீரசைவ சமயநெறி நிற்போர் தம் இட்டலிங்கத்தை அன்றி வெளியில் திருக்கோயிலில் உள்ள இலிங்கத்தைத் தாவர லிங்கம் என்று கூறி வழிபடுவது இல்லை. சிறப்பாகத் துறவு கொண்டோர் வழிபடமாட்டார். அப்படியிருக்க மணிவாசகர் பல ஊர்களுக்கும் சென்று ஆங்காங்குள்ள திருக்கோயில்களின் இறைவனை வழிபட்டுள்ளாரே இது சமய மாறுபாடன்றோ?

இவ்விரண்டு வினாக்களுக்கும் விடைகாணின் மாணிக்கவாசகர் காலம் யாதெனப் புலப்படும்.

பௌத்த சைனர்கள் தமிழகத்துக்கு வருவதற்கு முன்னர்த் தமிழ்நாட்டில் பல தெய்வ வழிபாடு இருந்தது. தமிழர் தத்தமக்கு வேண்டிய தத்தமக்கு விருப்பமான கடவுளர்களை வழிபட்டு வந்தனர். அவ்விருவர் வரவுக்குப் பின்னரே புத்தனை வழிபடுபவர் பௌத்தர். சினனை வழிபடுபவர் சைனர் எனப்பட்டது போலச் சிவனை வழிபடுபவர் சைவர் எனவும் விஷ்ணுவை வழிபடுபவர் வைஷ்ணவர் எனவும் இப்படி சமயச் சார்பாகப் பிரிக்கப்பட்டனர். சிவனை வழிபட்ட சைவர் இருவகையினராய் இருந்தனர். சிவலிங்கத்தைக் கோயிலில் சென்று வழிபடுவதோடு தம் வீட்டில் சிறு சிறு இலிங்கங்களாகக் கொண்டு வழிபட்டும் வந்தனர். அவர்களுள் சிறு இலிங்கத்தைத் தம் உடம்பில் எப்போதும் அணிந்தவர்களும் உண்டு. சைவர்களாகிய இவ்விரு வகையினருள் இலிங்கத்தை உடலில் அணிந்தவர்கள் தம்மை மற்றைச் சைவரின் வேறுபடுத்திக் கூறுவதற்கு வீரசைவர் எனப் பெயர் கொண்டனர். அதற்காகத் தம்

சமய நெறிகளை வகுத்துக்கொண்டனர். தத்துவங்களை யும் குறித்தனர். அவ்வாறு குறிக்கப்பட்டனவே சுடுத்தலம் அட்டாவரணம் போலும் அமைப்புகள் இந்த அமைப்புகள் பிற்காலத்தனவே! பசவேசர் காலத்தில் சீர்திருத்தப் பட்டன. ஆதிகாலத்தில் அரப்பா. மொகஞ்சதாரோ நாகரிகக் காலங்களிலிருந்தே இலிங்க வழிபாடு கையில் வைத்துப்பூசித்து உடலில் அணிவதும் உடலில் அணியாமல் பெட்டகத்து வைப்பதும் ஆகிய இருவகையிலும் அமைந் திருந்தது. அதேநிலை மாணிக்கவாசகர் காலத்தும் இருந் தது என்னலாம். எனவே வீரசைவ சமயநெறியிலக்கணம் வகுக்கப்படுவதற்கு முன்னைய காலத்தினர் என்னலாம். அதனால்தான் அவர் பாடல்களில் எந்த விடத்தும் சமய மரபுச் சொற்கள் ஆளப்படவில்லை.

வீரசைவத்தின் நெறியில் உறுதியாக நிற்பவர் அதிலும் துறவியாக திருக்கோயில்களில் உள்ள இலிங்கங்களை வழி படுதல்கூடாது என்னும் விதி மாணிக்கவாசகருக்குப் பின்னர் வந்ததாகும். அன்றியும் தம் உடம்பில் உள்ள இறைவனே திருக்கோயிலிலும் எழுந்தருளியுள்ளான் என்ற எண்ணத்தாலும் அக்கால வீரசைவர் திருக்கோயில் வழி பாட்டையும் கொண்டிருந்தனர். மாணிக்கவாசர் திருப் பெருந்துறையின் ஒரு பகுதியாகிய கோகழி என்னும் ஊரில் தம்மை முதலில் ஆட்கொண்ட குருபரனைக் ''கோகழியாண்ட குருமணி'' எனக் கூறி அவரையே திருக் கோயில்களிலும் இலிங்க வடிவில் கண்டு வழிபட்டார் எனலாம்.

வீரசைவநெறியை விளக்கும் இலக்கண நூல்கள் தமிழில் பழையனவாக ஒன்றும் இல்லை. கன்னட நாட்டில் கன்னடத்திலும் வடமொழியிலும் உள்ளன. தமிழகம் கன்னடம் ஆந்திரம் எனப் பிரிந்த காலத்திற்கு முன்னமேயே இட்டலிங்க வழிபாடு இருந்தது. அவை பிரிந்த காலத்தில் கன்னட நாட்டில் மிகப் பரவியிருந்தது. அதனால் இலக்க ணம் வகுக்கவேண்டியது அந்நாட்டினருக்கு இன்றியமை

மாதசாயிற்று. (ஆந்திரருக்கும் இப்படியே) தமிழகத்தைப் பொறுத்த மட்டில் அவ்விலக்கணம் மிகப் பிற்காலத்தே தான் கன்னட நாட்டிலிருந்து வந்த குருமார்களால் வற்புறுத்தப்படலாயிற்று. மாணிக்க வாசகருக்குப் பிற்காலத்தில்தான் தமிழகத்தில் இலக்கண நெறியோடு வீரசைவம் பரவலாயிற்று.

எனவே, மாணிக்கவாசகர் காலம் என்பது வீரசைவ சமய இலக்கணம் வகுக்கப்படுவதற்கு முற்பட்டது அல்லது அவ்விலக்கணம் தமிழகத்துப் பரவுவதற்கு முற்பட்டது எனலாம்.

மாணிக்கவாசகர் காலமானது வீரசைவ சமயத் தொடர்பான அட்டாவரணம் சடுத்தலம் போலும் கோட்பாடுகள் தமிழகத்தில் பரவுவதற்கு முற்பட்ட காலம் என்பது முன்னைய வீரசைவ முரசில் குறிப்பிடப்பட்டது. இம்முரசில் மேலும் சில செய்திகள் குறிப்பிடப்படுகின்றன.

''திருத்தகும், அறுவகைச் சமயத்து அறுவகை யோர்க்கும்
வீடு பேறாய் நின்ற விண்ணோர் பகுதி
கீடம் புரையும் கிழவோன்''

என்னும் திருவண்டப் பகுதி வரிகளில் மாணிக்க வாசகர் கூறிய அறுவகைச் சமயங்கள் யாவை எனக் காணின் அவர் காலம் இனிது புலப்படும். அவ்வரிகளுக்கு மறைமலையடிகளார்,

'பொழிவு பொருந்தும் அறுவகைப்பட்ட சமயத்தைக் கைப்பற்றும் அறுவகையோர்க்கும் வழிபட்டு அடையப்படும் வீட்டின் பயனாய் நின்ற கடவுளர் பகுப்புகள் எல்லாம் தன்னை நோக்கப் புழுவை யொப்பாராகத் தானே வீடு பேற்றிற்கு உரியனாய் நின்றோன்'

எனவுரை யெழுதி அறுவகைச் சமயமாவன,

''உலோகாயதம், பௌத்தம், சாயகியம், நையாயிகம், வைஷேசகம், மீமாம்சகம்

என ஆறும் ஒருவகை.

பிரமவாதி, வைணவவாதி, வேதவாதி, ஆசீவகவாதி, நிகண்டவாதி, பூதவாதி என்னும் ஆறும் ஒருவகை

என இருவகைப்பட்ட அறுவகைச்சமயங்களையே மாணிக்கவாசகர் அறுவகைச்சமயங்கள் என்றார்'' எனவும் எழுதினார்.

''சைவம் வைணவம் சாக்தம் காணா பத்தியம் கௌமாரம் சௌரம் என்று சங்கராசாரியர் வகுத்த அறுவகைச் சமயங்களே மாணிக்கவாசகர் கூறிய அறுவகைச் சமயங்களாம் எனின், அறுவகைச் சமயக் கடவுளரைப் புழு என்ற மாணிக்கவாசகர் சைவசமயச் சிவபிரானையும் புழு என்றாராவார். அது தவறு ஆதலி னாலும் சங்கராசாரியர் மிகப் பிற்பட்ட காலத்தவராதலி னாலும் அக்கருத்து தவறுடையதாகும் என்றும் மறை மலையடிகளார் மறுத்துள்ளார் (திருவாசக விரிவுரை (1957) கழகப் பதிப்பு. பக்கம்-212-250) அறுவகைச் சமயம் வழங்கிய காலத்தவர் மாணிக்கவாசகர் என்பது இதனால் விளங்கும்.

மேலும் மாணிக்கவாசகர் வரலாறும் காலமும்' என்னும் தமது ஆராய்ச்சி நூலில் மாணிக்கவாசகர் காலம் கி.பி. மூன்றாம் நூற்றாண்டாகும் என்றும் நிறுவியுள்ளார். அதுவே உறுதியானது என்பதற்கு மேலும் சில சான்றுகள் திருவாசகத்திலிருந்து காணலாம்.

ஆத்த மானார் அயலவர் கூடி
நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்
... ... ... ... ... ... ... ...
சமய வாதிகள் தத்தம் மதங்களே

அமைவதாக அரற்றி மலைந்தனர்
மிண்டிய மாயா வாதம் என்னும்
சண்ட மாருதம் சுழித்தலைத் தார்த்தும்
உலோகா யதனெனும் ஒண்டிறற் பாம்பு.

எனச் சமயங்கள் பற்றி மாணிக்கவாசகர் கூறுவதால் அவர் காலத்தில் நாத்திகம் பேசும் பௌத்தம் சமணம் ஆசீவகம் முதலியனவும் மாயாவாத மதங்களும் இருந்தன என அறியலாம்.

ஆசீவகர்களும் சமணர்களும் உயிர்களுக்கு அவற்றின் அறிவு நிலைகளுக்கேற்ப நிறம் கூறினர். மாணிக்கவாசகர் உயிர்களுக்கு நிறம் கூறாமல் அது தவறு என்பார் போலச் சிவபிரானுக்கு நிறம் கூறினார். ''நிறங்கள் ஓர் ஐந்துடையாய்'' (சிவபுராணம் 49) என்பது அவர் சிவபிரானுக்குக் கூறியது. நிலம், நீர், தீ, காற்று, வான் எனும் ஐம்பூதவடிவினன் சிவபிரான் ஆதலின் அவற்றின் நிறங்கள் அவனுக்கு ஓதப்பட்டன. நிலம் பொன்னிறம் நீர் வெண்ணிறம், தீ செந்நிறம், காற்று கருநிறம், வான் புகை நிறமாகும்.

காணப்படும் பொருள்கள் யாவும் அணுக் கூட்டங்களே என்பது யாவரும் ஒப்புவதாம், உயிரும் அணுத் தன்மையுடையதே என்பர். அதனால் நில அணு நீர் அணு என்று கூறுவதுபோல அணுவுயிர் என்றும் கூறுவர். அதனால் மாணிக்கவாசகரும் இறைவனை

அணுவே போற்றி (போற்றித் திருவகவல்-112)

என்றும்,

அணுத்தரும் தன்மையில் ஐயோன் காண்க
(திருவண்டப்பகுதி—45)

என்றும்,

பிறவாறும் அணுத்தன்மையன்

என்றார்.

பௌத்தர் சமணர் ஆகியோர் சைவ வைணவர் போல் வினைக்கொள்கையுடையவர்; உயிர்களின் பிறப்பு இறப்பு இன்ப துன்பங்களுக்கெல்லாம் அவை செய்யும் வினையே காரணம் என்பது அவர்கள் கொள்கை. ஆனால் ஆசீவகர் என்பார் உயிர்கள் செய்யும் வினைகளே பிறப்பு இறப்புக் கும் இன்பதுன்பங்களுக்கும் காரணம் என்பதை ஒப்புக் கொள்ளாமல் உயிர்களுக்கு அவை இயல்பில் அமைந்தன என்றும், அவ்வமைப்பு நியதி என்றும் கூறி, நியதியே காரணம் என்பர். அதனால் மாணிக்கவாசகர்க்குப் பௌத்த சைனர்களை மறுப்பதை விட ஆசீவகரின் நியதிக் கொள்கையை மறுப்பது கடமையாயிற்று. அதனால்தான் தம் பாடல்களில் பலவிடங்களில் வினைபற்றிக் கூறுவாரா னார்.

மீட்டிங்கு வந்து வினைப் பிறவி சாராமே
(சிவபுராணம் 25)

வினைக் கெடக் கைதர வல்ல கடவுள்
(போற்றித் திருவகவல் 94)

''வினையிலே கிடந்தேனை''
(திருச்சதகம் 22)

மடங்கஎன் வல்வினைக் காட்டை நின்
மன் அருள்தீக் கொளும் விடங்க
(நீத்தல் விண்ணப்பம் 19)

''பழவினைகள் பாறும் வண்ணம்
சித்தமலம் அறுவித்து (அச்சோப்பதிகம் 1)

என இப்படி வினைக் கொள்கையை வலியுறுத்துவாரா னார்.

இதுகாறும் கூறியவற்றால் மாணிக்கவாசகர் பௌத்த சமண ஆசீவகச் சமயத்தவர் தமிழகத்தில் வந்து தம் சமய நெறி பரப்பிய காலத்தவர் என்னலாம்.

பௌத்தர் தமிழகத்து வந்த காலத்தில் தமிழகத்தில் சிவ வழிபாடு இருந்தது. சிவ வழிபாட்டினரைத் தம் பக்கமாகத் திருப்ப வேண்டிச் சிவனையும் போற்றுவாராயினர். தத்துவ போதகர் எனக் கிறித்தவரால் போற்றப்பட்ட இராபர்ட்-டி நோபிலி என்பார் தமிழகத்து வந்து தம் கிறித்துவ மதத்தைப் பரப்பச் சாம்பல் பூசி செபமாலையும் கழுத்தில் மணிமாலையும் கொண்டு சைவ வைணவ மக்களைக் கிறித்தவராக்கியது போலப் பௌத்தருள் ஒரு சிலர் சிவனைப் போற்றினர். அதனால்தான் மாணிக்க வாசகர்

''புத்தன் புரந்தராதி அயன்மால் போற்றிசெயும்
பித்தன் பெருந்துறை மேய பிரான்''

(திருத்தெள்ளேணம் 18)

என்றார், எனவே பௌத்தருள் ஒரு பிரிவினர் தமிழகத்தில் வந்த தொடக்க காலத்தில் (கி.பி 3 ஆம் நூற்றாண்டுக்கு முன்) சிவனைப் போற்றியுள்ளனர் என்பது பெறப் படுதலின் மாணிக்க வாசகர் காலம் தமிழகத்தில் பௌத்தர் சிவனை மறுத்த காலத்துக்குச் சற்று முற்பட்டது என்னலாம்.

இனி, மாணிக்கவாசகர் கி.பி. ஏழாம் நூற்றாண்டினரான திருஞான சம்பந்தர்க்கு முற்பட்டவர் என்பதற்குச் சிறந்ததொரு சான்று திருவாசகத்திலிருந்து கிடைத்துளது.

சிவபிரானைத் தாம் கண்ணால் கண்டதாக மாணிக்க வாசகர் கூறினார்.

''கண்ணால் யானும் கண்டேன் காண்க''

(திருவண்டப் பகுதி-57)

என்பது அவர் வாக்கு. ஆனால் அவர்

கேட்டறியோம் உனைக் கண்டறிவாரை

(திருப்பள்ளியெழுச்சி-5)

என ஓரிடத்துக் கூறியதால் சிவபிரானைக் கண்டறிந்த அடியார் வரலாறே அவர் காலத்தில் பேசப்படவில்லை என்பது புலப்படுகிறது. அதனால் சிவபிரானை உமையம்மையுடன் கண்டு ''பெம்மான் இவன்'' எனச் சுட்டிக் காட்டிய திருஞான சம்பந்தர் வரலாறு அவர் காலத்தில் வழங்கப்படவில்லை என்பதும் அதனால் அவர் திருஞானசம்பந்தருக்கு முற்பட்டவர் என்பதும் பெறப்படும். இக்கருத்தை வெளியிட்டவர்:

டாக்டர், வை. இரத்தினசபாபதி

'கேட்டறியோம் உனைக் கண்டறிவாரை'

என்பதற்கு ''உன்னைப் பார்த்தறிந்தவர்கள் வீட்டைந்து விட்டதால் அவர்களிடம் நின் இயல்பைக் கேட்டறியோம்'' என்று பொருள் கொள்ளலாம் என்றால் அது பொருந்தாது ஏனெனின் கண்டறிந்தவர்கள் கூறியதைக் கேட்டமையால் தான் பூதங்கள் தோறும் நின்றான், போக்கிலன் வரவிலன் (திருப்பள்ளி-5) முதலிய இறைவன் தன்மைகள் கூற முடிந்தது. ஞான சம்பந்தர் கூறிய தோடுடைய செவியன் விடையேறி முதலியவற்றை அவர் வாக்கின் மூலம் கேட்டமையால் தான் அவற்றை உணர முடிந்தது. அதனால் உனைக் கண்டறிவாரிடம் கேட்டறியோம் என்னும் உரை பொருத்தமற்றதாகும்.

கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்
(திருக்கோத்தும்பி 4)

என மாணிக்கவாசகர் கண்ணப்ப நாயனாரைப் பற்றிக் கூறப்பட்ட வரலாற்றைக் கேட்டே அவ்வாறு கூறினார் என்றாலும்கண்ணப்ப நாயனார் சிவபிரானைக் கண்டவர் நேரே வீடு பேறடைந்தாரேயன்றிக் கண்ட பின்னரும் உலகில் இருந்தவர் அல்லர்.

ஏரார் இளங்கிளியே எங்கள் பெருந்துறைக் கோன்
சீரார் திருநாமம் தேர்ந்துரையாய்—ஆரூரன்

செம்பெருமான் வெண்மலரான் பாற்கடலான்
செப்புவபோல்
எம்பெருமான் தேவர்பிரான் என்று.

என்பது திருவாசகத் திருத்தசாங்க முதற்பாடல்.

''அழகிய இளங்கிளியே! பெருந்துறை இறைவனின் திருப்பெயரை, உருத்திரன் பிரமன் திருமால் ஆகிய தேவர் கூறுவதுபோல நீயும் ஆரூரனும் எம்பெருமானுமாகிய இறைவன் திருப்பெயர் 'தேவர் பிரான்' என்பதாகும் என்று ஆராய்ந்து உரைப்பாயாக.'' என்பது அப்பாடலின் பொருள்.

சிவபிரான் பெயராகச் சிவன், நீலகண்டன், புராந்தகன், ஆதிபகவன் முதலியவராகச் சிறப்புப் பெயர்கள் பல இருக்க அவற்றுள் ஒன்றைக் கூறாமல் தேவர்பிரான் எனக் கூறுவானேன்? கீர்த்தித் திருவகவலிலும் தசாங்கம் கூறிவரும்போது இறைவன் பெயராகத் தேவதேவன் (126) என்பதையே கூறினார். ஆயிரம் திருநாமம் இறைவனுக்கு உண்டு என்று (திருத்தெள்ளேணம்) கூறியவர்—சென்னிப் பத்து போலும் பதிகங்களில் பல பெயர்களைக் கூறியவர் தேவர்பிரான் அல்லது 'தேவதேவன்' என்பதே இறைவன் பெயர் என்பானேன்?

ஒவ்வொரு தேவர்க்கும் அவரவர் செய்த சிறப்புச் செயல்களால் பெயர்கள் அமைவதுண்டு. அவ்வாறே சிவபிரான் செயல்களாலும் அவனுக்குச் சிறப்புப் பெயர்கள் அமைந்துள்ளன. அப்பெயர்களுள் தேவர்பிரான் அல்லது தேவதேவன் என்பதே மாணிக்கவாசகருக்கு உகந்ததாயிற்று.

புரம் எரித்தது, நஞ்சுண்டது, தக்கனை அழித்தது ஆகிய மூன்று செயல்கள் மாணிக்கவாசகருக்குச் சிறந்தனவாகப் பட்டன போலும். இம்மூன்றையும் திருவாசகம் எங்கும் அடிக்கடிப் போற்றியுள்ளார். திருவுந்தியார்

என்னும் பகுதியில் புரம் எரித்ததையும் தக்கன் வேள்வி தகர்த்ததையும் பல பாடல்களாற் குறிப்பிட்டுள்ளார். அம்மூன்று செயல்களுள்ளும் தக்கன்வேள்வி தகர்த்த செயலே மாணிக்கவாசகரை மிகவும் கவர்ந்ததோ என்னும் படி அவர் பல இடங்களில் பாடியுள்ளார். அம்மூன்று வீரச்செயல்களிலும் திருமால் முதலிய தேவர்கள் அஞ்சி நடுங்க அவர்களைக் காத்தும் செருக்கடக்கியும் அவர்கட்குத் தலைவன் ஆனான் சிவபிரான். அதனால் அச்சிறப்பு நோக்கி அத்தேவர்களுக்கெல்லாம் தேவனானான் என்று கொண்டு 'தேவதேவன் அல்லது தேவபிரான்' என்பதையே சிறந்த திருப்பெயராகக் கூறினார் மாணிக்கவாசகர் என்னலாம்.

மாணிக்கவாசகர் காலம் ''ஆத்தமானார் அயலவர்கூடி நாத்திகம் பேசி நாத்தழும் பேறிய காலம். மாயாவாதம் உலோகாயதம் முதலிய மதங்கள் பெருகிய காலம். அதனால் சிவபிரான் பெயர் சிறப்புப் பெயராக அமையின் அவர்கள் கடவுளரை உள்ளடக்கிக் கூறியதாக அமையாது எல்லாச் சமயத் தேவர்கட்கும் சிவன் தலைவன் என்று கூற வேண்டுவதே இன்றியமையாததாகும், அதனால் 'தேவர் பிரான்' என்ற பெயரையே பெயராகக் கூறினார்.

புரமெரித்தது முதலியவற்றால் சிவபிரான் திருமால் முதலிய தேவர்கட்குத் தேவன் என்பது பெறப்படுமேயன்றிப் பௌத்த முதலிய சமயத் தலைவர்க்கும் தேவன் என்பது பெறப்படாது. புத்ததேவன் அருகதேவன் மற்கலி தேவன் என்று பௌத்த சமண ஆசீவக மதத்தவரும் தம் முதல் தலைவரைத் தேவன் என்றே குறிப்பிடலின் அவரையும் அடக்கித் 'தேவர்பிரான்' என்றார் மாணிக்கவாசகர் என்னலாம்.

பௌத்தரும் சமணரும் பிறப்பு இறப்புகளுக்கும் இன்ப துன்பங்களுக்கும் வினையே காரணம் என்பர், ஆசீவகரோ வினையை ஒப்பாமல் 'நியதி' என ஒன்றைக்கூறி அதன்

படியில் அவை நிகழ்வன என்பர். உயிர்கள் வீடுபேறு அடையும் என்பதை இம்மூவரும் ஒப்புவர். ஆனால் வீடு பேறடையும் உயிர் மீளப் பிறவாது என்பது சைவ வைண வக் கொள்கை.

அதுபோலவே பௌத்தரும் சமணரும் கொள்வர். ஆனால் ஆசீவகரோ வீடு பேறடையும் உயிர்கள் இரு நிலைகளில் அடையும் என்பர். மீண்டுவாரா வீடுபேற்று நிலை ஒன்று; சில காலம் இருந்து மீளவும் மண்ணில் வந்து பிறக்கும் நிலை மற்றொன்று. இவற்றைச் செம் போதக நெறி, மண்டலநெறி என்பர்; ஆசீவகர் (டாக்டர், விசயலட்சுமி தமிழகத்தில் ஆசீவகர்கள் பக். 38 : 1988) இவ்வாசீவகரின் இக்கொள்கையை மறுத்துரைக்கு முகமா கப் பின்வருமாறு கூறுகின்றார் மாணிக்கவாசகர்.

வேற்று விகார விடக்கு உடம்பின் உட்கிடப்ப
ஆற்றேன் எம்ஐயா அரனேயோ என்றென்று
போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார்
மீட்டு இங்குவந்து வினைப் பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பை கட்டழிக்க வல்லானே

(சிவபுராணம் 84 88)

என்பதில் பொய்கெட்டு மெய்யான அடியவர் மீளவும் இப் பூவுலகில் வந்து வினைக்கு ஏதுவான பிறவியைச் சாராத படி அவர்தம் ஐம்புலக் குரம்பைகளைக் கட்டோடு அழிக்க வல்லான் இறைவன் எனக் கூறுமுகத்தால் வீடுபேறடைந் தவர் மீளப்பிறத்தல் கில்லை என்பதையுணர்த்தினார். மேலும்,

''மீண்டு வாரா வழியருள் புரிபவன் (கீர்த்தித் திருவகவல் 1 17) என்றும்

... ... ...என்னையுந்தன் இன்னருளால்
இப்பிறவி யாட்கொண்டு இனிப்பிறவாமே காத்து

(திருவம்மானை 12)

என்றும்,

''பிறிவறியா அன்பர் நின்னருட்
பெய்கழல் தாளிணைக்கீழ்
மறிவறியாச் செல்வம் வந்து பெற்
றார்'' அடைக்கலப் பத்து 9

என்றும்,

''வாரா வகை தந்து வந்தாட் கொள்வானே''
(ஆசைப்பத்து 9)

என்றும்,

''வாரா வழியருளி வந்தெனக்குமாறின்றி
ஆரா வமுதாய் அமைந்தன்றே''
(திருவெண்பா 7)

என்றும் பலவிடங்களில் வீடுபெற்றோர் மீள்வதில்லை என்பதைத் தெளிவாகக் கூறியுள்ளார். எனவே ஆசீவகர் செல்வாக்கு மிகவும் பரவியிருந்த காலத்தில் அவர்தம் வீடு பேற்றுக்கொள்கையை மறுக்கவேண்டிய இன்றியமையாமை மாணிக்கவாசகருக்கு ஏற்பட்டது. அதனால் அவர் காலம் ஆசீவகர் செல்வாக்கு மிகுந்த கி. பி. 3 ஆம் நூற்றாண்டு என்னலாம்.

# 2. மாணிக்கவாசகர் குடமுழுநந்தீசரா ?

''குடமுழுந்தீசனை வாசகனாக் கொண்டார்.''
(தனித்திருத்தாண்டகம் 2:11)

என்பது அப்பரடிகள் வாக்கு. அது சிவபிரான் நந்தி தேவரை மாணிக்கவாசகராசப் பிறக்கச் செய்து ஆட்கொண்டதைக் குறிக்கும் என்பர். திருக்கயிலையில் சிவபிரானோடு அணுக்கராய் இருப்பவர்கள் கணத்தலைவர்கள். அவருள் முதன்மையாய் இருப்பவர் நந்தியெம் பெருமான். அவர் நந்திகணத்தலைவராவார். அவரே சிவபிரான் ஆணையால் நிலவுலகில் மாணிக்கவாசகராகப் பிறந்தார் என்பர். மறைமலையடிகளாரும் நந்தியெம் பெருமானே மாணிக்கவாசகராகப் பிறந்தார் என அறுதியிடாமல், நந்திகளுள் ஒருவர் மாணிக்கவாசகராய் பிறந்தார் என்றார்கள். (மாணிக்க வாசகர் வரலாறும் காலமும், பக்கம் 166-172, கழகப் பதிப்பு 1957) அதற்கு அவர்கள் காட்டிய அகச்சான்று.

''நீக்கி முன்எனைத் தன்னோடும் நிலாவகை
குரம்பையிற் புதுப்பெய்து நோக்கி''
(அதிசயப்பத்து 8)

என்னும் அதிசயப்பத்தில் காணப்படும் தொடராகும். ''முன்னை சிவபிரானாகிய தன்னோடு அணுக்கமாய் நின்ற

என்னைப் பின் ஒரு கால் அங்ஙனம் நில்லாதபடித் தன்னின் நின்றும் நீக்கி இவ்வுடம்பாகிய குடிலுள் புகுமாறு புகுத்திப் பார்த்திருந்து'' என்பது அதன் பொருள். அது கொண்டு ''சிவபிரான் மாட்டு அணுக்கமாய் இருந்த அடியார் ஒருவரே அங்ஙனம் மாணிக்க வாசகராகப் பிறந்தருளினார் என்பது தேற்றமாம்'' என்றார்கள்.

''நரியைக் குதிரை செய்வானும்''
(திருமுறை 4 பாடிளம் பதிகம் 2)

என நரி பரியாக்கியதையும்,

''மணியார் வைகைத் திருக்கோட்டில் நின்ற திறமும் தோன்றும் என மண்சுமந்த செய்தியையும் அப்பரடிகள் குறித்திருத்தலின், 'குடமுழந்திசனை வாசகனாக் கொண்டார்' என அவர் குறித்ததும் மாணிக்க வாசகரையே குறித்ததாகலாம் எனக் கொண்டார்கள் போலும்.

நந்தியெம் பெருமானோ நந்திகளுள் ஒருவரோ மாணிக்கவாசகராக வந்தார் எனின் அவர், நேரே கயிலையிலிருந்து பூவுலகில் மானிட வடிவில் வந்தாராவர். ஆனால் மாணிக்கவாசகர் தாம்,

புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதனாய்ப் பேயாய்க் கணங்களாய்
வல் அசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லா நின்றஇத் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்''
(சிவபுராணம் 26-31)

எனக் கூறியது மாறுபடுகின்றது. ஒரு கால் நந்தியெம் பெருமானோ நந்திகளுள் ஒருவரோ இவ்வாறெல்லாம் பிறந்து இளைத்துப் பின்னர் மாணிக்க வாசகராக வந்தாரோ?

மாணிக்கவாசகர், "மெய்யே யுன் பொன்னடிகள் கண்டு இன்று வீடுற்றேன்" (ஷை 32) எனத் தொடர்ந்து கூறிடுதால் நந்தியம் பெருமானாகவோ நந்திகளுள் ஒருவராகவோ கயிலையில் இருந்தபோது இறைவன் குருவடியைக் காணவில்லையோ? காணாதவர் இறைவன் அணுக்கமாய் இருந்தார் என்பது எப்படி? எனவே அவ்விருவருள் ஒருவர் மாணிக்கவாசகராக வந்தார் என்பது ஐயத்துக்கிடமாகவுள்ளது.

அப்படியானால் "நீக்கி...குரம்பையிற் புகப் பெய்து நோக்கு" என்பதன் பொருள் யாது என வினவலாம். இனி வருவது அதற்கு விடையாம்.

உலகத் தோற்றம் பற்றிச் சிவப்பிரகாச அடிகளார் பின் வருமாறு கூறுவர், "பரமசிவர் என்றும் பிரமம் என்றும் சொல்லப்படும் சிவலிங்கத்தினின்றும் சதாசிவம் தோன்றும் அச்சதாசிவத்தின் சத்திஞானம்; அவ்விருவரால் சிவன் தோன்றுவான். அச்சிவனுக்குச் சக்தி இச்சா சக்தி; அவ்விருவராலும் உருத்திரன் தோன்றுவான். அவன் சக்தி கிரியையாவாள்; அவ்விருவராலும் அரிதோன்றுவன். அவன் சக்தி இலக்குமி, அவ்விருவராலும் அயன் தோன்றுவான் அயனின் சக்தி கலைமகள்; அவ்விருவராலும் உலகத் தோற்றம் உண்டாம்." (பிரபு லிங்கலீலை, துதிகதி 18-20) என்பது அடிகள் வாக்கு. இவ்வுலகத் தோற்றம் இறைவனின் நினைவு மாத்திரையின் உண்டாகும் இதனால் இறைவடிவாகிய சிவலிங்கத்தினின்றே சதாசிவம் முதலிய வடிவங்களும் உயிர்களும் உலகமும் வெளிப்படுகின்றன என்பது போதரும் அதனால்' 'இறைவனே தன்னிடத்திருந்து உயிர்களை நீக்கி உடலிற் புகப்பெய்து உலகில் உலவவிடுவன் என்பது பெறப்படும். அந்த முறையில்தான் மாணிக்கவாசகரையும் இறைவன் உலகில் உலவவிட்டான். அதனால் அவர் புல்லாகிப் பூடாய் எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்துப்பின் குருமணியாய் எழுந்தருளியாட்

கொண்ட இறைவன் திருவடியைக் கண்டு நின்ற நிலை யெய்தினார். ஆதனால் அவர்,

நீக்கி முன்எனைத் தன்னொடு நிலாவகை
குரம்பையிற் புகப்பெய்து
நோக்கி நுண்ணிய நொடியன சொற்செய்து
நுகமின்றி விளாக்கைத்துத்
தூக்கி முன்செய்த பொய்யறத் துகளறுத்து
எழுதரு சுடர்ச் சோதி
ஆக்கி ஆண்டுதன் அடிநிற் கூட்டிய
அதிசயம் கண்டாமே (அதிசயப்பத்து 8)

என்று இறையருளை வியந்து பாடினார்.

மாணிக்கவாசகர் தம்மைப் பற்றிய செய்திகளை அகச் சான்றாகப் பாடல்களில் கூறியுள்ளவர், எங்கும் தமது முன்னைய பிறப்பாகிய நந்திப் பிறப்பைப் பற்றிக் கூற வில்லை. நந்தீசனே தாம் என்பதை அவர் உணர்ந்த குறிப்பு யாண்டும் காணப்படவில்லை.

இனி அப்பரடிகள் 'நந்தி' என்னாமல் 'நந்தீசன்' என்றது காணத்தக்கது. ஈசன் என்பது சிவபிரானையே பொதுவில் குறிப்பதாகும்.

''பகவனே ஈசன் மாயோன் பங்கயன் சினனே புத்தன்'' எனப் பிறரும் கூறல் காணலாம். அதனால் சிவபிரானா கவே வழிபடப்படும் தகுதிபெற்றவர் நந்தியெம் பெரு மாள். ஆதலின் அவர் 'நந்தீசன்' எனப்பட்டார். அதனால் அப்பரடிகள் கூறிய 'நந்தீசன்' என்பது நந்திகளுள் ஒருவரா காமல் நந்திகளின் தலைவரான நந்தியெம் பெருமானையே குறிக்கும். அவரே குடமுழா இயக்குபவர். அதனால் அப்பரடிகள் நந்தீசன் என்றது நந்திகளுள் ஒருவரைப்பற்றி நந்தியெம்பெருமானையேயாம்.

இனிக் குடமுடி நந்தீசன் என்றது நந்தியெம் பெரு மானையே குறிக்கும் எனின், ''குடமுடி நந்தீசனை வாசக னாக் கொண்டார்'' என்பதற்கு வேறு பொருள்தான் காணல் வேண்டும்.

'வாசகன்' என்பது வடசொல், அது சொல்லவல்லான் என்னும் பொருள் தருவது திருக்கயிலாயத்தில் இறைவ னைத் தொழ வருபவர்களை சின்னவர் இவர் என்று இறைவனுக்குத் தெரிவித்துப் பின்னர் உட்புகவிடும். கடமையை மேற்கொண்டு வாயிற் காவலனாய் நிற்பவன் நந்திதேவன் ஆதலின், ''குடமுழா இயக்கும் நந்தீசனை வாசகனாக் கொண்டான் (சொல்லவல்லானாக் கொண் டான்)'' என்று பொருள் காணலாம். சிவபிரானுக்குச் சொல்லவல்லவனாக நந்தியெம்பெருமான் இருத்தல்போல் முருகப் பெருமானுக்கும் சொல்லவல்லானர் உண்டு என்பதை,

''வேறு பல் உருவிற் குறும்பற் கூளியர்
சாறயர் களத்து வீறுபெறத் தோன்றி
அனியன் தானே முதுவாய் இரவலன்
வந்தோன் பேருமநின் வண்புகழ் நயந்தென
சினியவும் நல்லவும் நனிபல ஏந்தி

(திருமுருகு 282-286)

எனவரும் திருமுருகாற்றுப்படை வரிகளால் அறியலாம். அதனால் நந்தியெம் பெருமான் மாணிக்கவாசகராகப் பிறக்கவில்லை என்பதையறியலாம். அதனால் ''நீக்கி முன் என்றதற்கு'' உலகத்தோற்ற முறையில் இலிங்க வடிவிலி ருந்து நீக்கி உலகைத் தோற்றுவித்து அதில் தம்மை உடலு டன் உலவவிட்டதையே மாணிக்கவாசகர் கூறினார் என்ன லாம். ''உலகமும் உயிரும் உகமுடிவில் தன்பால் ஒடுங்கு தற்கு இடமாய் இருப்பதால், 'ஒடுங்கி' எனப் பெயர் கொள்ளும் இறைவனிடத்திருந்தே மலம் காரணமாக உலகமும் உயிரும் தோன்றும்'' என்னும் சிவஞான போத முதற் சூத்திரமும் இங்கு நோக்கத் தக்கதாகும்.

# 3. மூவருக்கு முன்னவர் மாணிக்கவாசகர்

தேவார முதலிகளாகிய திருஞான சம்பந்தர். அப்பரடிகள், சுந்தரர் என்பவர்க்குக் காலத்தால் முற்பட்டவர் மாணிக்கவாசகர் என்பதற்குப் பல சான்று கள் காட்டி நிறுவியுள்ளனர் மறைமலையடிகள் போல்வார். பின் வரும் சான்றும் அவற்றுள் ஒன்றாகக் கொள்ளுமாறு இக்கட்டுரை மூலம் குறிக்கப்படும்.

மாணிக்க வாசகர் காலத்தில் ஆசிவக மதமும் புத்த மதமும் பெருகியும் சைனமதம் கருகியும் இருந்தன. அதனால் அவர்க்கு ஆசிவக புத்த மதங்களை மறுப்பதே நோக்கமாக இருந்தது. அன்றியும் திருமால் முதலிய சிறு தெய்வ வழிபாடும் அவரால் வெறுக்கத் தக்கதாயிருந்தது, அதனால் திருமாலுக்குத் தெய்வத் தன்மை குறியாமலே தம் பாடல்களைப் பாடினார். திருமால் பன்றியாய்ச் சிவபிரான் திருவடி தேடியதைச் சுட்டிக் கூறியதோடு (திருத்தெள்ளேணம்) பல பாடல்களில் திருமாலுக்கு அரியன் சிவன் எனவும் பாடியுள்ளார். திருமாலை மதித்த திறம் இரண்டே உண்டு. ஒன்று, திருமால் ஆயிரம தாமரைப் பூக்களைக் கொண்டு வழிபடும் போது ஒரு பூக் குறைய அதற்கீடாகத் தன் கண் ஒன்றைத் தோண்டி மலரடியில் இட்டு வழிபட்டதையும் அதற்கு வந்த சிவன் சக்கரம் பரிசாக அளித்ததையும் ஒரு பாடலில் கூறிய தாம் (திருத்தோணாக்கம் 10) திருச்சாழல்—8ஆம் பாடலும்

இதைக்காணும் மற்றொன்று, சிவபிரான் முப்புரம் எரித்த காலையில் திருமால் இடபமதாய்த் தாங்கியதாம் (திருச்சாழல் 14) இவை தவிரத் திருமாலுக்குச் சிறப்புத் தந்து எங்கும் பாடவில்லை.

திருஞான சம்பந்தரும் அப்பரடிகளும் தம் காலத்தில் பெரிதும் ஆட்சி பெற்றிருந்த சமணரை வென்று ஒடுக்கும் செயலில் ஈடுபட்டவர்கள். தம்மையும் தம்மைச் சார்ந்த சிவனடியார்களையும் துன்புறுத்திய சமணரை அழிப்பதில் பெரிதும் ஈடுபாடு கொண்டனர். அதற்கு அவர்கள் மேற் கொண்ட உத்திகள் பலவற்றுள் திருமாலைப் போற்றுத லும் ஒன்றாகும்.

இக்காலத்தில் ஆட்சியில் இருக்கும் கட்சியை வீழ்த்த, அதற்கு எதிரான கொள்கைகளையுடைய கட்சிகள் தம்முள் ஒன்று சேர்ந்து ஒன்றை ஒன்று தழுவிப் பேசி மக்களைத் தம் பக்கம் சேர்ப்பது போலச், சைனரை வீழ்த்த வேண்டித் திருஞான சம்பந்தரும் அப்பரடிகளும் திருமாலை முழு முதற் கடவுளாக எண்ணாவிடினும் சிவபிரானின் ஒரு பாகத்தமர்ந்தவனாகத் தழுவிப் பாடினர்.

அவ்வாறே ஆழ்வார்களும் சிவபிரானை முழு முதற் கடவுளாக ஒவ்வாதிருந்தும் திருமாலின் பாகத்தானாகப் புகழ்ந்தனர்.

''ஊறினார் ஓசையுள் ஒன்றினார்
ஒன்றிமால் கூறினார்.''
(திருத்தென்குடித் திட்டைப்பதிகம் 6)

என்றும்,

''மாதொரு பாலும் மாலொரு பாலும்
மகிழ்கின்ற நாதன்''
(திருப்பிரமபுரம், எய்யா வென்றிப்பதிகம் 2)

என்னும் திருஞான சம்பந்தரும்,

'மாலொரு பாகமாக மகிழ்ந்த நெய்த்தானத்தாரே'
(திருநெய்த்தானம் திருநேரிசை 7)
''மாலை மகிழ்ந்தொரு பால் வைத்தார் போலும்''
(திருவிடைமருதூர் திருத்தாண்டகம் 1)

என்றும்,

''அரியலால் தேவியில்லை ஐயன் ஐயாறனார்க்கே''
(திருவையாறு திருநேரிசை 3 : 5)

என்றும்;

மாலை யிடப்பாகத்தே மருவக் கொண்டார்
(பொது-தனித்திருத்தாண்டகம் 2: 3)

என்றும் அப்பரடிகளும் சிவபிரானையும் திருமாலையும் இணைத்துப் பாடியமை காணலாம்.

இவ்வாறே பொய்கை ஆழ்வாரும், தாம் கண்ட கடவுள் பற்றிக்கூறும்போது,'' கடவுளின் பெயர்: அரன், நாரணன்; அவர் ஊரும் ஊர்தி: ஆனேறு, கருடன்; இருப்பிடம், இமயமலை, கடல்; தொழில்: அழித்தல், காத்தல்; படை: சூலம், சக்கரம்; நிறம்; செந்நிறம், கருநிறம்: ஆனால் உருவமோ ஒன்றுதான்'' என்று கூறினார். (முதல் திருவந்தாதி 5)

தாழ்சடையும் நீள்முடியும் ஒண்மழுவும் சக்கரமும்
சூழரவும் பொன்நாணும் தோன்றுமால்-சூழும்
திரண்டருவி பாயும் திருமலைமேல் எந்தைக்கு
இரண்டுருவும் ஒன்றாய் இசைந்து
(மூன்றாம் திருவந்தாதி 63)

என்றும் பேயாழ்வார் பாடியிருத்தலையும் காண்க.

சைனசமயத்தை வீழ்த்த சைவ, வைணவ சமயத்தாரும் ஒன்றுசேர வேண்டிய நிலை நாயன்மார் ஆழ்வார் காலங்களில் ஏற்பட்டது போல, மாணிக்கவாசகர் காலத்தில் ஏற்படவில்லை. அவர் காலத்தில் வைணவம் பெரிதாகப்

பாவியதில்லை. அன்றியும் எந்த வகையிலும் திருமாலைச் சிறு தெய்வமாகக் கொண்டாரேயல்லாமல் போற்றத்தகும் கடவுளாகக் கொண்டாரில்லை. சைனரைப்பற்றி அவர் எங்கும் குறிப்பிடாததால் அவர் காலத்தில் சைனம் ஆங்காங்கு சிற்சிலவூர்களில் அருகியிருந்தது என்பது புலப்படும்.

கடவுள் இல்லையென்னும் கொள்கையுடைய புத்தரை ஆசீவகரை வீழ்த்தக் கடவுள் உண்டு என்றும் வைணவரை உடன்சேர்த்துத் திருமாலை போற்றியிருக்கலாமே எனின் மாணிக்கவாசகர் வீரசைவராதலின் சிவலிங்கப் பெருமானைத் தவிர மற்றும் ஓர் தெய்வந் தன்னை உண்டு என நினைக்கவே அஞ்சினார் ஆதலின் திருமாலைப் போற்றாதவரானார்.

வடநாட்டில் ஆசீவகம் பவுத்தம் சைனம் என்னும் சமயங்கள் ஒரே காலத்தில் பரவியிருந்தன என்றாலும் தென்னாட்டில் அதுவும் தமிழகத்தில் முதலில் ஆசீவகமும் பவுத்தமுமே பரவியிருந்தன. மாணிக்க வாசகரால் அவை ஒடுக்கப்பட்ட பின்னர்ச் சைனம் தலையெடுத்துப் பரவியது. அப்பரவலைத் தடுக்கவேண்டிய இன்றியமையாமை நாயன்மார்களுக்கும் ஆழ்வார்களுக்கும் ஏற்பட்டது. எனவேதான் திருமாலை நாயன்மார்களும், சிவபிரானை ஆழ்வார்களும் (பொய்கையார், பேயார்) போற்றிப் பாடுவாராயினர்.

ஞான சம்பந்தராலும் அப்பரடிகளாலும் சைனம் ஒடுக்கப்பட்ட காரணத்தால் அவர்கட்குப் பிற்பட்ட காலத்தவரான சுந்தரர்க்கு அவ்வளவாகச் சைனரைப் பற்றிய எண்ணம் இல்லையாயிற்று.

எனவே இக்கட்டுரை மூலம் மூவர்க்கு முந்தியவர் மாணிக்கவாசகர் என்பதையறியலாம்.

திருஞான சம்பந்தர் திருநாவுக்கரசர் சுந்தரர் ஆகிய மூவர் தேவாரப்பதிகங்களையும், மூன்று மூன்று ஒன்று என முறையே ஏழு திருமுறைகளாகவும், மாணிக்க வாசகரின் திருவாசகத்தை எட்டாம் திருமுறையாகவும் முன்னோர் வகுத்தது கால அடிப்படையிலாதலின் மாணிக்கவாசகர் மூவர்க்குப் பிற்பட்டவராவார் என்பது ஒரு சார் கொள்கை (பன்னிரு திருமுறை வரலாறு இரண்டாம் பாகம்) இது பொருந்துமா?

கி.பி. 985 முதல் 1014 வரை சோழ நாட்டையாண்ட முதலாம் இராசராச அபயகுலசேகரன் என்னும் பேரரசன், நம்பியாண்டார் நம்பிகளின் துணையால் தில்லைத் திருச்சிற்றம்பலத்தின் ஓர் அறையிலிருந்து மூவர் தேவாரங் களை வெளிக்கொண்டு வந்தான் என்பது திருமுறை கண்ட புராண வரலாறு. அம்மூவரும் தாங்கள் தங்கள் தேவாரப் பதிக ஏடுகளை அந்த அறையில் வைத்துக் கதவில் தம் கைச்சாத்திட்டு வைத்தனர் என்றும் அப்புராணம் கூறும். (காப்புச்செய்யுள்)

இறைவன் திருவடியடைந்த முறையில் முதலில் திருஞான சம்பந்தரும் பின்னர்த் திருநாவுக்கரசரும் பின்னர்ச் சுந்தரரும் தத்தம் ஏடுகளை வைத்திருத்தல் வேண்டும். ஒருவர் வைத்த அறையிலேயே மற்றவரும் வைத்தனர் என்றால், பலரறிய வைத்தனரா மறைவாக வைத்தனரா? என்னும் வினா எழுகிறது. யாவரும் அறிய வைத்தனராயின் இராசராசன் காலம்வரை ஒருவர்க்கும் தெரியாமல் இருந்தது எப்படி? மறைவாக வைத்தனர் என்றால் அப்படி வைக்கக் காரணம் என்ன? சுந்தரர் காலம்வரை இருந்த தமிழ்த் தில்லை வாழ் அந்தணர்கள், பின்னர் ஆரிய அந்தணராகத் தம்மை மாற்றிக் கொண்ட மையால் தமிழ்ப் பதிகங்களை வைத்த அறையைத் திறக்க வெட்டாமல் தடுத்துக் காலப் போக்கில் அதை மறக்கச் செய்தனரோ? அது எப்படியாவது ஆகட்டும்,

மூவர் தேவாரங்களையும் நம்பியாண்டார் நம்பிகளால் ஏழாக வகுத்த இராசராசன், தன் காலத்து வரை பாடப் பட்டு வந்த இறைவனைப் பற்றிய பதிகங்களைத் தொகுக்க எண்ணி மாணிக்கவாசகர் திருவாசகத்தை எட்டாம் திருமுறையாக வகுத்தான் என்றும், திருவிசைப் பாவை ஒன்பந்தாதிருமுறையாகவும், திருமூலர் திருமந்திரத்தைப் பத்தாந்திருமுறையாகவும் வகுத்துப் பின்னர் உதிரிப் பாடல்களைப் பலர் பாடியவற்றைத் திரட்டிப் பதினோராந்திருமுறையாகவும் வகுத்தான் என்றும் திருமுறை கண்ட புராணம் கூறும்.

முதலில் தேவாரப் பதிக ஏடுகள் கிடைத்த மகிழ்ச்சி யில் அவற்றைத் தொகுத்தவன், பின்னர் மற்றைப் பாடல் களையும் தொகுக்க எண்ணியதால், திருவாசகத்தை எட்டவதாகத் தொகுத்தானேயன்றிக் கால வரிசையில் தொகுத்தான் என்றால் பொருந்தாது. கால வரிசையில் தான் தொகுத்தான் என்றால் சுந்தரர்க்கு முற்பட்டவர் களான காரைக்காலம்மையார், நக்கீரர், சுந்தரர் காலத்த வரான சேரமான் பெருமாள் நாயனார் போல்வார் பதிகங் களைப் பதினோராந்திருமுறை எனப் பிற்படத் தொகுத் திருத்தல் இயலாது. அன்றியும் சுந்தரருக்குப் பிற்பட்டவர் மாணிக்கவாசகர் என்றால் திருவாசகமும் பதினோராந்திரு முறையில் சேர்க்கப்பட்டிருத்தல் வேண்டும்.

பாடல் எண்ணிக்கை மிகுதி காரணமாகத் திருவாச கத்தை எட்டாம் திருமுறையாகத் தொகுத்தான் எனின் மூவாயிரம் பாடல்கள் கொண்ட திருமந்திர நூலையன்றோ எட்டாம் திருமுறையாக வகுத்திருத்தல் வேண்டும்?

''நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன்'' எனச் சுந்தரரால் போற்றப்பட்ட திருமூலரின் திருமந்திரம் சுந்தரரிடம் ஏழாம் திருமுறைக்கு முன்னரன்றோ வைக்கப் பட்டிருத்தல் வேண்டும்? எட்டவதாகக் கூட இன்றிப் பத்தாவதாக வைக்கப்பட்டதேன்?

எனவே திருமுறை வகுத்தது, காலத்தையடிப்படை யாக வைத்து வகுத்ததன்று என்பது பெறப்படும். அதனால், எட்டாந்திருமுறையாகத் திருவாசகம் வைக்கப் பட்டதைக் கொண்டு மாணிக்கவாசகர் மூவர்க்குப் பிற் பட்டவர் என்பது பொருந்தாது.

இனித் திருச்சிராப்பள்ளி ஒரு காலத்தில் சமணர் வயப் பட்டிருந்ததாகவும், திருநாவுக்கரசரால் சைவனாக மாறிய மகேந்திர வர்ம பல்லவ மன்னனால்தான் சைவத்திருத்தல மாக மாற்றப்பட்டதாகவும் கூறி மாணிக்கவாசகர் போற் றித் திருவகவலில் ''சிராப்பள்ளி மேவிய சிவனே போற்றி''(155) எனக்கூறியிருப்பதால், அவர் திருநாவுக் கரசர் காலத்துக்குப் பிற்பட்டவர் ஆவர் என்பர் பன்னிரு திருமுறை வரலாறுடையார்.

பள்ளி என்பது பௌத்த ஆசீவக சைன சமயத்துறவி கள் வாழும் இடத்தைக் குறிக்கும். மாணிக்கவாசகர் காலத்தில் பெரிதும் பரவியவர்கள் பௌத்தரும் ஆசீவக ரும். அவர்களை வென்று அவர் தம் சமயங்களைக் குறையச் செய்தவர் அவர். அதனால் அவர் காலத்திற்கு முன் பௌத்தரிடமோ ஆசீவகரிடமோ இருந்த சிராப்பள்ளி அவர் காலத்தில் சிவத்தலமாக மாறியமையால் அவர் ''சிராப்பள்ளி மேவிய சிவனே போற்றி'' என்றார். அவர் காலத்துக்குப் பின்னர் சைனர் வயமாகிப் பின் மகேந்திர வர்ம பல்லவனால் மீளவும் சிவத்தலமாக மாற்றப்பட்டி ருக்க வேண்டும்.

இனித் திருவாசகப் போற்றித் திருவகவலில் ''கலை யார் அரிகேசரியாய் போற்றி'' (190) என வருவது கொண்டு அரிகேசரி என்பது திருஞான சம்பந்தரால் கூன் நிமிர்க்கப் பெற்ற நின்ற சீர் நெடுமாறன் என்னும் பாண்டிய மன்னன் சிறப்புப் பெயர்; அவன் பெயரால் அமைந்த அரிகேசரி நல்லூரையே மாணிக்கவாசகர் குறிப் பிட்டார்; ஆதலின் அவர் ஞானசம்பந்தர்க்குப் பிற்பட்ட வர் என்பதும் ஒரு கொள்கை,

சேக்கிழார் தம் அரசனான குலோத்துங்கனின் சிறப்புப் பெயராகிய அநபாயன் என்பதைக் குறிப்பிட்டது போல் (பெரியபுராணம் 1, 8, 272, 3, 35 முதலியன பார்க்க) நின்ற சீர் நெடுமாறனை அரிகேசரி என்னும் பெயரால் குறிப்பிடவில்லை.

பிற்காலச் சோழர் தம்மை இராசகேசரி பரகேசரி எனச் சிறப்பித்துக் கொண்டமை போலப் பாண்டியரும் அரிகேசரி எனச் சிறப்பித்துக் கொண்டிருக்கலாம்.

இறையனார் களவியல் உரையில் உதாரணப் பாடல்களாகப் பாண்டிக் கோவைப் பாடல்கள் காட்டப்பட்டுள்ளன. அவற்றில் சில பாடல்களில் அரிகேசரி என்னும் பெயரும், நெடுமாறன் என்னும் பெயரும் தனித்தனியாகக் கூறப்பட்டுள்ளன. அவனைப் பராங்குசன் என்றும் பாண்டிக் கோவைப்பாடல்கள் கூறுகின்றன. பட்டத்தரசன் பெயராக எது அமையும் என்பது புலப்படவில்லை. யாவும் சிறப்புப் பெயர்களாகவேயிருத்தல் வேண்டும். பாண்டிக் கோவைபாண்டியனே ஞானசம்பந்தரால் கூன் நிமிர்த்தப் பட்ட நின்ற சீர் நெடுமாறன் என்னும் பாண்டியன் என்பதற்குச் சான்றில்லை. பாண்டிக்கோவைப் பாடல்களில் எங்கும் திருஞான சம்பந்தர் கதையோ, சமணர் பற்றிய செய்தியோ கூறப்படவில்லை. அரிகேசரியின் பலவூர் வெற்றிகளே கூறப்பட்டுள்ளன. அவன், அளநாட்டில் பகைவரை வென்று துரத்தியவன் என்ற செய்தி,

ஆயின சீரரிகேசரிக் கண்றள
நாட்டுடைந்து போயின தெவ்வரிற்
போயின கானலிற்புள்ளினமே (148)

என்று வருவதால் அரிகேசரி காலத்தில் அளநாட்டில் போர் நிகழ்ந்துளது என்பது புலப்படும் அந்த அளநாடு அவன் பிற்காலத்தும் அப்பெயருடன் விளங்கியிருந்துளது தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதி 4ல் சின்னமனூர்ப்

பட்டயத்தில் ''அளநாட்டுப் பிரமதேயம் அரிகேசரி நல்லூரி.'' எனக் குறிக்கப்படுவது அதனைப் புலப் படுத்தும்.

எனவே 'அரிகேசரி' என்பது பாண்டியர்கள் சொல்லிக் கொள்ளும் சிறப்புப் பெயராகுமேயன்றி நின்றசீர் நெடு மாறனாகிய பாண்டியனுக்கேயுரிய சிறப்புப் பெயராகாது. அதனால் மாணிக்கவாசகர் கூறிய 'அரிகேசரியாய்' என்ப தில் உள்ள அரிகேசரி என்னும் ஊர் அவர்க்கு முற்பட்டே வழங்கி வந்த ஊரே என்னலாம்.

இனி மாணிக்கவாசகர் திருக்கோவையாரில் இரண்டு பாடல்களில் (306, 307) வரகுணன் எனும் அரசனைக் குறிப்பித்துள்ளார். கி. பி. 4 ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்ட வேந்தர் யாரும் வடமொழிப் பெயர் உடையவ ரல்லர். வரகுணன் என்னும் வடமொழிப் பெயருடைய அரசர் இருவர் இருந்தனர். அவருள் முதல் வரகுணன் கி. பி. 792 முதல் 835 வரை ஆண்டவன். அவனையே மாணிக்கவாசகர் கூறியுள்ளார் என்பதும் ஒரு கருத்து.

கி. பி. 5 ஆம் நூற்றாண்டுக்கு முன்னர் வடமொழிப் பெயருடைய வேந்தர்இருந்ததில்லை என்பதுபொருந்தாது. தொல்காப்பியம் வடமொழிச் சொற்களை எப்படி ஆள வேண்டும் என விதி கூறியிருப்பதைக் காணலாம். இயக்கன், மதிவாணன், உக்கிரப் பெருவழுதி எனும் பாண்டிய மன்னர்கள் வடசொற்கலந்த பெயருடையவர் களாவர். இவ்வேந்தர்கள் கி. பி. 4 ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டவர்கள். திருவாசகம் திருக்கோவையாரில் வட சொற்கள் வந்தமைக்கும் இதுவே அமைதியாம்.

இனித் ''திருவாசகத்திற் கூறப்பட்ட பஞ்சமலம், வினையொப்பு, முதலிய தத்துவ விளக்கங்கள் சில தேவார ஆசிரியர் காலத்துக்குப் பின் தோன்றியவை எனத் தெரி கிறது'' என்பது ஏற்பதற்கில்லை.

மாணிக்கவாசகர் தத்துவ விளக்கம் கூற வந்தவரல்லர் அவர் பாடல்களில் அவை இயல்பாய் வந்தவை. அவர் காலத்தில் தத்துவ நூல்கள் இல்லை. திருவாசகம் தேவாரம் போன்ற தோத்திர நூல்களில் வந்த கருத்துகளை வைத்தே பிற்காலத்தார் சாத்திர நூல்களை இயற்றினர். இதை டாக்டர் வை. இரத்தினசபாபதி எழுதிய திருமுறைத் தெளிவே சிவஞானபோதம் என்னும் அரிய ஆய்வு நூலில் விளக்கமாக அறியலாம் (சென்னை பல்கலைக் கழகப் பதிப்பு 1977)

இனி மாயாவாதம் என்பது ஆதிசங்கரர் காலத்தில் அவரால் பரப்பப்பட்டது என்றும் அவர் திருஞானசம்பந்தர் காலத்துக்குப் பிற்பட்டவர் என்றும் அம்மாயாவாதத்தை மாணிக்கவாசகர்,

மிண்டிய மாயா வாதம் என்னும்
சண்ட மாருதம் சுழிந்தடித்தார்த்து" (54, 55)

எனக் குறிப்பிடுவதால் அவர் கி. பி, ஏழாம் நூற்றாண்டுக்குப் பிற்பட்ட சங்கரர் காலத்துக்குப் பிற்பட்டவர் என்றும் கூறுவர் பன்னிரு திருமுறை வரலாறுடையார்.

சங்கரர் சிவமும் உயிரும் ஒன்றே என்னும் ஏகான்ம வாதத்தினர். ஏகான்ம வாதத்தை நிலை நிறுத்துவதற்கு அவர் காலத்தும் உலவி வந்த மாயாவாதம் அவர்க்குத் துணைசெய்தது. அதனால் அவர் தம் கொள்கைக்கு மாயாவாதத்தை வலுவாகப் பிடித்துக் கொண்டார், இயல்பாகவே வினைக்கொள்கையுடைய தமிழர், பௌத்த சைன சமயத்தார் வினைக் கொள்கையை வலியுறுத்தியதால் தாமும் வலியுறுத்தி வருவது போல்வதே சங்கரர் மாயாவாதத்தை வலியுறுத்துவதும் ஆம். அறுசமயங்களை வகுத்து அறுமத நிறுவநர் (சண்மதஸ் தாபனாசாரியார்) எனப்பட்டமையால் அவர்காலத்துக்கு முன்னர் சைவ வைணவம் இல்லை என்னலாமோ? அதேபோலத்

சங்கரர்க்கு முன்னர் மாயாவாதம் இல்லை என்பது கூடாது.

இனிச் சுந்தரர் தம் திருத்தொண்டத் தொகையில் மாணிக்கவாசகரைக் கூறாமையாலும் மூவர்க்குப் பிற் பட்டவர் அவர் என்பர்.

சுந்தரர் தனியடியார்க்கென்று பத்து பாடல்களும் தொகையடியார்க்கென்று ஒரு பாடலும் பாடியுள்ளார். இப்பதினொரு பாடல் தொகுதியைத் திருத்தொண்டத் தொகை என்பர் பிற்காலத்தார். பத்தாம் பாடலில் தொகையடியாராக எழுவரைக் குறித்தார். இவ்வெழுவருடன் முதற்பாடலின் முதலில் வரும் தில்லை வாழ்ந்தனர் என்பவரையும் ஏழாம் பாடலின் முதலில் வரும் பொய்யடிமையில்லாத புலவர் என்பவரையும் தனியடியாராகக் கொள்ளாமல் தொகையடியாராகக் கொண்டு சுந்தரர் தொகையடியார் ஒன்பதின் மரைக் கூறினார் என்பர்.

தில்லை வாழ்ந்தணரும், பொய்யடிமையில்லாத புலவரும் தொகையடிராயின் தனியடியார்களைக் கூறும் பாடல்களில் தனித்தனியாகக் கூறார் சுந்தரர். அவ்விருவரையும் தனியடியாராகக் கொண்டமையால் தான் தனியடியார்களைக் கூறும் பாடல்களில் தனித்தனி வைத்துக் கூறினார். அதனால் தில்லை வாழ்ந்தனர் என்னும் அடியார் ஒருவரும் பொய்யடிமையில்லாத புலவர் ஒருவரும் இருந்துள்ளனர் எனக்கொள்ளுதல் வேண்டும். அவருள் ஒருவர் மாணிக்கவாசகராகலாம். அவர் வீரசைவராகலின் சேக்கிழார் சமயக்காழ்ப்புக் காரணமாகக் கூறாத தொகையடியார் போலக் கூறினார்.

தில்லை வாழ்ந்தணன் என்பது தில்லை நடராசப் பெருமானைக் குறிக்கும். அவரும் அடியவர் வேடத்தில் பலகால் வந்தவரே. சேக்கிழார் தம் பெரிய புராணம் தில்லையில் அரங்கேறுதற்கேற்ப அக்கால ஆரிய அந்தணரைத் தமிழந்தணர் போலக்கொண்டு சிறப்பித்துப் பாடி

னார் என்னெனின் பிற்காலச் சோழர் ஆரியப்பார்ப்பன ரிடத்து பெருமதிப்பு வைத்ததே காரணம்.

சுந்தரரால் குறிப்பிடப்பட்ட திருநாளைப் போவார் திருக்குறிப்புத் தொண்டர் என்பவர்கள் தனியடியார்களா தொகையடியார்களா? என்பதைக் கூறமுடியாது. நந்தனாரைத் தில்லைத் தரிசனத்துக்கு நாளைப் போவேன் என நாளும் சொல்லி வந்தமையால் நாளைப் போவாராயினர் என்றும், திருக்குறிப்புத் தொண்டர் சிவத் தொண்டர் குறிப்பறிந்து நடந்தமையால் அப்பெயர் பெற்றார் என்றும் கண்டு தனியடியார்களாகப் பாடிய சேக்கிழார், பொய்யடிமையில்லாத புலவர் என்பவரைப் பொய் யடிமையில்லாத காரணத்தால் அப்படிச் சிறப்பித்துச் சொல்லப்பட்டவர் எனக் கண்டு தனியடியராக மாணிக்க வாசகரைக் கூறாமல் தொகையடியாராகக் கூறுவானேன்? மறைமலையடிகள் கூற்றுப்படிச் சேக்கிழார் வேண்டு மென்றே மறைத்தார் என்னலாம், இனிக் கோகழி கல்லா டம், வேலம்புத்தூர் சாந்தம்புத்தூர். உத்தரகோச மங்கை, பூவலம். பட்டமங்கை, அரிகேசரி. ஓரியூர், பாண்டூர், கவைத்தலை, குவைப்பதி போலும் ஊர்கள் தேவாரங்களிற் காணப்படாமையும் சிலதலபுராணங்கள் காணப்படாமையும் காரணமாக மூவர்க்குப் பிற்பட்டவர் மாணிக்கவாசகர் என்பதும் பொருந்தாது. என்எனின் மூவரும் சென்ற ஊர்களும் உண்டு. செல்லாதவூர்கள் பலப்பல அந்நிலையில் மேலே காட்டிய ஊர்களுக்குச் செல்லவில்லை மூவரும் என்பதே பொருந்தும். மேலும் அவை இக்காலத்தில்லாமையால் மறைந்தன என்றோ அரி கேசரி நல்லூர் என்பது சின்னமனூர் என மாறியதுபோல மாறின என்றோ கொள்ளுதல் வேண்டும். அன்றியும் மாணிக்கவாசகர் மேற்கண்ட ஊர்களுக்குச் சென்றவர்தாம் எனக் கொள்ளவும் இயலாது. கேட்டிருந்த ஊர்களாகவும் ஆகலாம். இனிக் களவியலுரையில் வரும் பாண்டிக் கோவைப் பாடற் சொற்றொடர்ப் பொருள்கள் திருக் கோவையாரிலும் வருவது கண்டு மாணிக்கவாசகரைக்

களவியல் உரைக்காலத்துப் பிற்பட்டவர் எனவும் கூறுவர். அதையே மாற்றித் திருக்கோவையாரில் உள்ள சொற்றொடர்ப் பொருள்களே களவியலுரைப் பாண்டிக் கோவையில் காணப்படுகின்றன என்னலாமே?

கோகழி என்பது அவர் குருநாதரின் அல்லது அவர் முன்னோரின் ஊராகும். கோகழி எனும் கட்டுரையில் அதன் விவரம் காண்க.

இதுகாறும் கூறியவற்றால் மாணிக்கவாசகர் மூவர்க்கு முந்தியவர் என்பது வலியுறும்.

---

இக்கட்டுரை, மறைமலையடிகள் எழுதிய மாணிக்கவாசகர் வரலாறும் காலமும் என்னும் ஆராய்ச்சி நூலின் கருத்தை முழுதும் தழுவி என் கருத்துகளுடன் எழுதப் பட்டது.

# 4. கோகழி

'கோகழி' என்ற சொல், மணிவாசகப் பெருமானால் ஐந்து இடங்களில் குறிக்கப்படுகின்றது, 1 'கோகழி யாண்ட குருமணிதன் தாள் வாழ்க! 2. கோகழி மேவிய கோவே போற்றி. 3. கொம்பின் மிழற்றும் குயிலே கோகழி நாதனைக் கூவாய் 4. கடையவனேனைத் தொண்டாகக் கொண்டருளும் கோகழியெம்கோமாற்கு 5, நண்ணிப் பெருந்துறையை நம்மிடர்கள் போயகல, எண்ணியெழு கோகழிக் கரசைப் பண்ணின், மொழியாளோடு உத்தர கோசமங்கை மன்னிக் கழியாதிருந்தவனைக் காண் என்பன அவ்விடங்கள்.

இக்கோகழி என்பது, கன்னட நாட்டுப் பெல்லாரி மாவட்டத்திலுள்ள கோகழி என்ற ஊர் என்றும் சீகாழி என்றும் திருவாவடுதுறை என்றும், திருப்பெருந்துறை என்றும் பலர் பலவாறு கூறுவர். சைவப்பெரியார் திரு மு. அருணாசலம்பிள்ளை அவர்கள், திருப்பெருந்துறைக் கோயிலைக் குறிக்கும் என்று கூறி, மேற்கண்ட ஊர்கள் பற்றிய கருத்துக்களைத் தெளிவுறமறுத்துள்ளார்கள். ஆதலின் அவைபற்றி ஆராயாமல், பிள்ளையவர்கள் கூறும் கருத்துப்பற்றி மட்டும் இக்கட்டுரையில் கருதலாம்.

திருப்பெருந்துறைக் கோயிலுக்கே, கோகழி என்று பெயராகும், என்பதற்கு அவர்கள் கூறும் காரணங்கள் இரண்டு, அவை 1 கோ் என்பது பசுத்துவம்: கழி என்பது கழித்த இடம் எனவே, மணிவாசகர் தமது பசுத்துவம்

கழித்த இடம் திருப்பெருந்துறைக் கோயிலாதலின், அதனைக் கோகழி எனக்குறிப்பிட்டார் 2. பல சிவத் தலங்களில் தலத்துக்கு ஒரு பெயரும், கோயிலுக்கு ஒரு பெயரும் அமைந்திருப்பதை நாம் அறியலாம். வெண்ணெய் நல்லூர் அருட்டுறை, சாத்தமங்கலம்—அயவந்தி; கருவூர் ஆநிலை எனக் காணலாம். இங்ஙனமே பெருந்துறைக்கும் நாம் கொள்வோமானால், பெருந்துறை ஊர்ப் பெயராகவும், இறைவன் குரு மணியாக எழுந்தருளி யாட்கொண்ட குருந்தமர நிழல் (ஆகிய கோயில்) கோகழியாகவும் கொள்ளலாம்.

இனி இவைபற்றிக் காண்போம். தமது பசுத்துவத்தைக் கழித்த இடம் என்று, எவ்விடத்தையும் எவரும் கோகழி என்ற பெயரால் குறிக்கவில்லை. கோகழி என்ற ஆட்சி மணிவாசகப்பெருமானால் வெளிப்பட்டும் அவர்க்குப் பின்வந்தோர் யாரும் அதைக் கொள்ளவில்லை. அதனால் முதற் காரணம் பொருந்துமா? என்பது ஆய்வுக்குரியது!

வெண்ணெய் நல்லூர் அருட்டுறை, கருவூர்த்திருவாநிலை என ஊரும் பேரும் சேர்த்துக் கூறப்படுதல் போலத் திருப்பெருந்துறைக் கோகழி எனச் சேர்த்துக் கூறப்படாமையின் இரண்டாம் கருத்தும் ஆய்வுக்குரியதே. "நண்ணிப் பெருந்துறையை" என்னும் பாடலில், பெருந்துறையைத் தனியாகவும் மணிவாசகர் கூறினாரேயல்லாமல், பெருந்துறைக் கோகழி எனச் சேர்த்துக் கூறவில்லை. சேர்த்துக் கூறுவது வழக்கு என்பதை அப்பரடிகள் "கடந்தையுள் தூங்கானை மாடச் சுடர்க் கொழுந்தே" என்று, பெண்ணாகடம் கோயிலைக் 'கடந்தையுள் தூங்கானை மாடம்' எனக் கூறியதாலும், "தக்கிருந்தார் ஆக்கூரில் தான் தோன்றி மாடமே" என ஞானசம்பந்தப் பெருமான் ஆக்கூரையும் தான்தோன்றி மாடக் கோயிலையும் இணைத்துப் பாடியதாலும், "வெண்ணெய் நல்லூர்

அருட்டுறை'' என ஆளுடை நம்பிகள் வெண்ணெய் நல்லூரையும் அருட்டுறைக் கோயிலையும் இணைத்துப் பாடியதாலும், அறியலாம். 'கச்சித் திருவேகம்பம்' எனக் காஞ்சிபுரத்தையும் ஏகம்பக் கோயிலையும் இணைத்து மணிவாசகப் பெருமானே பாடியுள்ளாரே.

இனிக் ''கோகழி'' என்பது ஒரு தனிப்பட்ட ஊரே என்பதற்குத் திருவாசகத்திலிருந்தே சான்றுகள் காண லாம். 1. சிவபுராண மூன்றாம் அடியில் கோகழியைக் கூறியவர், அச்சிவபுராணத்தின் பதினைந்தாம் அடியில் பெருந்துறையைக் கூறியுள்ளார், 'சீரார் பெருந்துறைத் தேவனடி போற்றி' என்பது அவர் வாசகம்.

2. போற்றித் திருவகவலில்,

''பராய்த்துறை மேவிய பரனே போற்றி
சிராப்பள்ளி மேவிய சிவனே போற்றி
மற்றோர் பற்றிங் கறியேன் போற்றி
குற்றா லத்தெங் கூத்தா போற்றி
கோகழி மேவிய கோவே போற்றி
ஈங்கோய் மலையெம் எந்தாய் போற்றி
பாங்கார் பழனத் தழகா போற்றி
கடம்பூர் மேவிய விடங்கா போற்றி''

என்ற அடிகளில், பராய்த்துறை, சிராப்பள்ளி குற்றாலம் என முன்னரும், ஈங்கோய் மலை பழனம்—கடம்பூர் எனப் பின்னரும் ஊர்களைக் கூறி, இடையில் கோகழியைக் கூறியிருப்பதால் கோகழியும் ஒரு தலமேயாகும்.

3. இறைவனின் ஊராக உத்தரகோச மங்கையையே கூறினார் மணிவாசகர், 'தாதாடு பூஞ்சோலைத் தத்தாய் நமையாளும், தாதாடும் பாகத்தன் வாழ்பதியென்— கோதாட்டிப் பத்தரெல்லாம் பார்மேற் சிவபுரம் போற் கொண்டாடும் உத்தர கோசமங்கையூர்'' (120) எனவும்

கீர்த்தித் திருவகவலில் 'உத்தரகோச மங்கை ஊர்' எனவும் கூறியமை காண்க, 'கோகழி' கோயிலாயின், அந்தக் குருமணியாய் வந்து இறைவன் ஆட்கொண்ட சிறப்பு நோக்கி, அதனுடைய திருப்பெருந்துறையையே இறைவன் ஊர் எனக்கூற வேண்டும். அவ்வாறு கூறாமையானும் கோகழி கோயிலாகாது.

4. ''கோகழி யாண்ட குருமணி'' என்றமை போலவே, கூடல் இலங்கும் குருமணி'' என்றதும் நோக்கின், கூடல் போலவே கோகழியும் ஓர் ஊராகும் எனக் கொள்ளலாம்.

5. பெருந்துறையைச் சார்ந்த ஓர் ஊராகக் கோகழியைக் கொள்வதாலும் தவறில்லை. ஒரு நகரம் பல சிற்றூர்களைக் கொண்டு அமைதல் உண்டு. பெருந்துறை பெருவழக்காகவே, கோகழி வழக்கிழந்திருக்கலாம். ''ஆடக மதுரை அரசே போற்றி'' என மதுரையைக் கூறிய மணிவாசகர், மீண்டும் அடுத்த அடியில் ''கூடல் இலங்கும் குருமணி போற்றி'' என மதுரையையே கூறினார். முன்னர் மதுரை என்றவர், அடுத்து அதன் வேறு பெயராகிய கூடல் என்பதைக் கூறுவானேன்? ஒரே ஊரை அடுத்து அதன் பெயர்களால் குறிப்பிடுவதால் அவ்விரண்டும் தனித்தனியூர்களே எனக் கொள்ளலாம். மதுரை என்பது பெரிய நகரமாகவும், கூடல் என்பது அதன் உள் ஊராகவும் வழங்கியிருத்தல் வேண்டும். அவ்விரண்டிடங்களிலும் தனித்தனிக் கோயில் இருந்திருத்தல் வேண்டும். பொதுவில் மதுரைக்கு ஒரு கோயிலும் கூடல் என்னும் பகுதிக்கு ஒரு கோயிலும் இருந்திருக்கலாம். இப்படியே பெருந்துறையும் கோகழியும் அமைந்தனவாகலாம்.

6. மணிவாசகர் தமது குயிற்பத்தில் 2ஆம் பாடலில், 'பெருந்துறை மேயபிரானை' எனவும், 3 ம் பாடலில் 'சீலம் பெரிதும் இனிய திருவுத்தரகோச மங்கை' எனவும் 6 ஆம் பாடலில் ''கோகழி நாதனே'' எனவும் குறிப்பிடுவ

தால் பெருந்துறை உத்தரகோசமங்கை என்னும் ஊர்கள் போலவே, கோகழியும் ஓர் ஊராகும் எனக் கொள்க.

7. பெருந்துறைக் கோயிலே கோகழி, என்பதற் கேற்ப ''நண்ணிப் பெருந்துறையை'' என்ற பாடலுக்குப் பிள்ளையவர்கள் கூறும் உரையாவது. (நெஞ்சே முன்பு நம்பொருட்டு பண்ணின் மொழியாளோடு உத்தரகோச மங்கை மன்னிக் கழியா திருந்தவனை, (இன்று) பெருந் துறையை வந்து நம்மை ஆட்கொள்ளும் பொருட்டுக் கோகழியில் உள்ளவனை, நீ சென்று தரிசிப்பாயாக'' என்பது, இவ்வுரையில் அரசை, இருந்தவனை என்னும் இரண்டாம் வேற்றுமை விரிகளுக்கு இயைபு இல்லையா கிறது ஆனால்

''நெஞ்சே! நம் இடர்கள் போயகல எழுந்தருளும் கோகழிக் கரசை உத்தரகோச மங்கையுள் மன்னிக் கழியா திருந்தவனைப் பெருந்துறையை நண்ணிக் காண்'' எனப் பொருள் கொள்வது சிறக்கும் எனலாம். மேலும் மதுரை, சிதம்பரம் குற்றாலம் பாவநாசம் முதலிய ஊர்ப்பெயர்கள் வழங்கப்படுதல் போலப் பெருந்துறை என்பதும் ஊர்ப் பெயராகவும், இறைவன் பெயராகவும் வழங்கப்பட்டதாக லாம். 'பெருந்துறை' என்று சொல்வதன் மூலம் பிறப் பறுத்தேன் என்பார், ''பெருந்துறையேயென்று பிறப் பறுத்தேன்', என்றார். அதனால், ''பெருந்துறையை, கோகழிக்கரசை, உத்தரகோசமங்கை மன்னியிருந்தவனை நண்ணிக் காண்'' எனவும் பொருள் கொள்ள அமைந்துள் ளது, இப்பாடல்.

8. பெருந்துறைக்கோயிலே கோகழி என்றால், மணி வாசகர் ''தில்லை நகர்புக்குச் சிற்றம்பலம் மன்னும் ஒல்லை விடையானை'' எனத் தில்லையில் சிற்றம்பலம் இருப்பதை விளக்கமாகக் கூறியதைப் போலப் பெருந் துறையில் கோகழியிருப்பதாக கூறியிருக்கவேண்டும். அவ் வாறு கூறவில்லை.

9. ''வாதவூர் இறைவன் ஒதிய மொழிகளுள்
மூவரும் ஓதிய முதுபதியொழியத்
தீதிலாப் பதிமற்றியாம்தனையினில்
திருப்பெருந் துறையும் திருக்கோகழியும்
கூர்புகழ் உத்தர கோச மங்கையும்''

என்று பெருந்துறை, கோகழி, உத்தரகோச மங்கை என்னும் மூன்றிடங்களும் அடுத்தடுத்துக் கூறுகிறது. 'மணிவாசக திருப்பதிக கொத்து' என்னும் பாடல். இப் பாடலைப் புறச் சான்றாகக் கொள்ளலாம்.

இதுகாறும் கூறிய சான்றுகளிலிருந்து, கோகழி என்பது ஓர் ஊராகத்தான் இருக்கவேண்டும் என்பது புலப் படும். இனி அவ்வூர் எது எனக்காணல் வேண்டும். திருப் பெருந்துறைக் கோயிலில் குருந்தமர நிழலில் இருந்த குருமுனிவர் மூலம், உபதேசம் பெற்றவுடன் பாடியது சிவபுராணம் என்னும் பாடல். குருவின் உபதேச மொழி காதில் ஒளித்துக் கொண்டேயிருந்ததால், அம்மொழியின் மாற்று வடிவாகிய 'நமச்சிவாய' என்பதை முதலில் கொண்டு 'நமச்சிவாய வாழ்க' எனத் தொடங்கினார். அம் மொழிக்குரியவனை 'நாதன்' எனக் கொண்டு 'நாதன் தாள் வாழ்க' என வாழ்த்தினார். அந்நாதன் யார் எனின், அவனே குரு வடிவில் வந்து உபதேசித்தவன் என்பார். 'குருமணி' எனக்கூறி 'குருமனிதன் தாள் வாழ்க' என வாழ்த்தினார். அக்குருமணிக்குரிய இடம் 'கோகழி' என் றார். திருப்பெருந்துறைக் குருந்தமர நிழலில் இருந்த குருவையே, கோகழிக் குருமணி என்றார். அதனால்' பெருந்துறைக் குருவே, கோகழிக் குருவாகக் காட்சித் தந் தார் என்றும் அக்கோகழிக் குருவே மணிவாசகர்க்கு குல குருவாக அமைந்தவர் என்றும், பெருந்துறை உபதேசத் துக்கு முன்னர் அதாவது ஞானம் எய்துவதற்கு முன்னர்க் கோகழிக் குருவிடம் குலகுரு முறையில் தொடர்பு கொண் டிருந்தவர் அவர் என்றும், பெருந்துறைக் குருவும் கோகழிக்

குருவாகவே காட்சியளித்தார் என்றும், அதனால் அக்குரு வைச் சிவனாகவே தேறினார் என்று அறியலாம்.

மணிவாசகர் காலம் சம்பந்தர் அப்பர் காலங்களுக்கு முற்பட்டதென்றும், சுந்தரர் காலத்துக்குப் பிற்பட்டது என்றும் பலவாறு கூறுவர். மேற்கூறிய மூவரும் ஓதாத பதிகளான சந்திரதீபம், தேவூர்த்தென்பால் தீவு, மந்திர மலை, மயேந்திரமலை, முதலிய ஊர்கள், 'மணிவாசகர் பாடல் திருப்பதிகக் கொத்து' என்ற தலைப்புப் பாடல் ஒன்றில் காணப்படுகின்றன. சந்திர தீபம் முதலிய ஊர்கள் திருவாசகத்தில் வைப்புத் தலங்களாக உள்ளன. இவை தமிழகத்துக்கு அப்பாற்பட்ட ஊர்கள். இவ்வூர்களை மணிவாசகப்பெருமான் குறிக்கக் காரணம் இருக்க வேண்டும்.

கி. பி. ஆறாம் நூற்றாண்டிற்கு முன்னர் அதாவது அப்பர் சம்பந்தர் காலத்துக்கு முன்னரே, வடக்கே மத்தமயூரசந்தானம் என்றொரு சைவாசிரிய மரபு விளங்கியதாகவும் அச்சந்தானத்தின் ஒரு கிளையினர், நருமதை யாற்றங்கரையிலுள்ள 'கோகழி என்ற சிறுகுன்று ஒன்றின் மேல் ஒரு மடம் நிறுவினதாகவும், கோகழி பிற்காலத்தில் கோளகி என மருவியதாகவும், அதனால் கோகழி மடம் கோளகிமடம் என்றாயினதாகவும் கோளகி மடத்தார் தெலுங்கு கன்னட நாடுகளில் ஆங்காங்கு மடங் கள் அமைத்துச் சைவநெறி விளக்கியதாகவும், தமிழகத் தில் திருக்காளத்தி, திருப்பாலைவனம், திருவொற்றியூர், திருநெல்வேலி, திருவாலீசுரம், காஞ்சிபுரம், தேவிகாபுரம், திருவானைக்கா, திருக்கொடுங்குன்றம் (பிரான் மலை) திருப்புத்தூர், திருப்பரங்குன்றம் முதலிய இடங்களில், கோளகி மடங்கள் அமைக்கப்பட்டுச் சைவநெறி வளர்க்கப் பட்டதாகவும், அம்மடங்களுக்கு அவ்வக்கால அரசர்களால் ஆதரவு இருந்ததாகவும் கல்வெட்டுகளால் அறிகிறோம்.

மாணிக்கவாசகர் தாம் தோன்றிய திருவாதவூரிலோ, அல்லது சிதம்பரத்திலோ வேறெங்கோ ஒரு கோகழி

மடத்தின் குருவைக் குலகுருவாகக் கொண்டவராகலாம்' கோகழி யாண்ட குருமணி, கோகழிக்கரசு, கோகழி நாதன் என்று அவரையே குறித்தனர் என்றும் கொள்ள லாம்.

மத்த மயூர சந்தானத்தைச் சார்ந்த ஆமர்த்தக தீர்த்தநாதர் இருந்த ஆமர்த்தக மடத்திலிருந்து ஒரு கிளை தோன்றிச் சிவபுரி சந்தானம் என்ற பெயருடன், வடநாட்டில் சமயத்தொண்டு புரிந்தது என்பது அறியப் படுகின்றது. தேவார முதலிகளால் அடிக்கடி பயிலப் படாத சிவபுரம் என்னும் ஊர், மணிவாசகத்தில் மிகுதியும் ஆளப்படுகின்றது. முதற்பாடலின் இறுதியில் ''சிவபுரத் தின் உள்ளார்'' என்ற தொடர் காணலாம். பல இடங் களில் சிவபுரத்தைக் கூறியுள்ளார். சிவபுரம் என்னும் ஊர் சிதம்பரத்தைச் சார்ந்துள்ளது. சிதம்பரத்தில் கோளகி மடம் இருந்ததாக அறிகிறோம், தமிழகத்தில் பல இடங் களில் சிவபுரி என்னும் ஊர்கள் இருந்தாலும். மணிவாசக ரால் குறிக்கப்படும் சிவபுரி தில்லையைச் சார்ந்ததாக இருக்கலாம் என்று நினைப்பதில் தவறிராது.

அடிகள் கூறிய கல்லாடம் பற்றி ''இதைப் பாண்டிய நாட்டுப் பழம்பதிகளுள் ஒன்று எனவும் மேற்குக்கடற்கரை யில் கொல்லத்துக்கு அருகில் இருந்த ஊர் எனவும் வேறு வேறு கூறுவர். வீரசைவ ஞானாசாரியார்களுடைய மரபு ஒன்று 'ஹலலட' என்று வழங்கப்பட்டு வருவதாகவும். அஃது ஒரு கால் 'கல்லாடர்' என்ற பெயரோடு ஒற்றுமை யுடையதாக இருக்கக்கூடும் என்றும் சிலர் கருதுகின்றனர்'' எனக் கல்லாட மூலப்பதிப்பு ஒன்றின் பதிப்புரையில் காணப்படுகின்றது. இக்குறிப்பைக் கொண்டு கல்லாடம் என்னும் ஊரில் ஒரு (வீர) சைவ மரபு விளங்கியிருந்திருக்க வேண்டும் எனக் கருதலாம். அதுவும் கோகழி (கோளகி)

அடிகள் குறிப்பிடும் சந்திரதீபம் என்பது, வங்காளத்தில் உள்ளதென்றும், அங்கு சந்திர கோமி என்னும் வடமொழியாசிரியர் இருந்தனர் என்றும், அவர் புத்த மதத்தினர் என்றும், அவர்பால் புத்த சமய அறிவு மணிவாசகர் பெற்றிருக்கலாம் என்றும் திரு சு. நடேசபிள்ளை யவர்கள் குறிப்பிடுவதாகத் திரு. மு. அருணாசலம்பிள்ளை அவர்கள் குறிப்பிடுவர். முன்னவர் கருத்தைப் பின்னவரே மறுத்துள்ளார். எனினும் சந்திரதீபத்தில் புத்த சமய குரவர் ஒருவர் இருந்தார். அவர் காலம் கி பி. 465-544 ஆகும் என்பதால், ஓர் கருத்தை நாம் கொள்ளலாம். 'சந்திர தீபத்தில் புத்தமதப் பிரச்சாரம் இருந்தது போலவே, சைவ சமயப் பிரச்சாரமும் இருந்திருக்கலாம். அதன் தலைவர் சந்திர தீபத்துச் சாத்திரன் எனப் பெற்றிருக்கலாம். அவர் கோளகி அல்லது சிவபுரி சந்தானத்தவராகலாம்' என்பதுவே அக்கருத்தாம்.

அடிகளால் குறிப்பிடப்படும் 'தேவூர்த் தென்பால் திகழ் பெருந் தீவு' என்பதை, இலங்கை எனக் கருதுகின்றனர். அங்கே இறைவன் கோலங்கொண்டு வீற்றிருக்கின்றார் என்றார் அடிகள். அதைச் சொல்வதன் நோக்கம் யாது?

''நிகய சங்கிரகம் என்னும் சிங்கள மொழி வரலாற்றுக் குறிப்பேடு, முதலாம் சேனனை, ஒரு சைவ சமயத்துறவி, சித்துக்கள் பல செய்து காட்டி, சைவமாக மாற்றினார் என்று கூறுகிறது. மேலும் ஊனமாக இருந்த அவ்வரசனுடைய மகளைப் பேச வைத்துப் பெரும்புகழ் பெற்றார் என்றும் அது குறிப்பிடுகிறது'' இவ்வாறு எழுதி, ஊமைப் பெண்ணை—ஈழத்திலிருந்து கொண்டு வரப்பட்டவளை—மணிவாசகர் பேசவைத்த வரலாற்றொடு தொடர்பு படுத்திக் காட்டுபவர் க.த. திருநாவுக்கரசு இவர் கூற்று, கால ஆய்வில் எப்படியாயினும், இலங்கையில் சைவ இயக்கம் பௌத்தர்களுக்கு எதிராக இருந்திருக்கிறது என்பது உறுதியாம்.

தேவூர் தென்பால் திகழ் தீவு என்ற அடிகள், தேவூர் பற்றிச் சிறப்பிக்கவில்லை. ஆயினும் தீவுக்கு எல்லை காட்ட ஆளப்பட்டது. யாவருக்கும் அக்காலத்தில் தெரிந்த நகரமாக தேவூர் இருந்திருக்க வேண்டும். திருஞான சம்பந்தர் அவ்வூரைப் பற்றித் ''தென்தமிழ்க் கலை தெரிந்தவர் பொருந்திய தேவூர்'' என்றார் எனவே தமிழறிஞர் பெருமக்கள் பெருகி இருந்த ஊராக இருந்த தால், யாவர்க்கும் தெரிந்த ஊராகியிருக்கும்.

அடிகளால் கூறப்பட்ட மயேந்திரம், மந்தரம் என்றும் வழங்கப்படும், கோளகி வழிவந்த விசுவேசுவரசம்பு என்பார்க்குக் கி.பி. 1261-ல் உருத்திராதேவி என்பவர், மந்தரம் என்னும் ஊரையும், அதன் அருகிலுள்ள தீவுகளை யும் (இலங்கைகள்) வழங்கினார்; வெலகபூடி என்ற ஊரை யும் கொடுத்தார் என்பது தெரியவருகிறது. வெலகபூடி என்பது வேலம்புத்தூர் எனப்பட்டதோ? மயேந்திரம் மந்தரம் என்னும் ஊர்களை, அடிகள் குறிப்பிடுவதால் அடிகளுக்குள்ள கோளகித் தொடர்பு கருதலாம்.

மேலே காட்டப்பட்ட ஊர்களின் செய்திகளால் கோளகி சந்தானம், தெற்கே இலங்கை முதல் வடக்கே வங்காளம் வரை பரவி ஆங்காங்கே மடம் அமைத்துச் சைவசமயத்தைப் பரப்பி வந்தது என்பதும் அக்கோளகி கோகழியில் திரிபே என்பதும், கோகழிக் குருவே மணி வாசகர்க்குக் குலகுரு என்பதும் ஓரளவு தெளியலாம்.

☐ ☐ ☐

# 5. மாணிக்க வாசகரைக் கோகழிக் குருமணி ஆட்கொள்ளல்

திருப்பெருந்துறைக் கோகழிக் குருமணியானவர், தம்மை ஆட்கொண்டவற்றை மாணிக்கவாசகர் ஆங்காங்கே தம் பாடல்களில் குறிப்பிட்டுள்ளார். ''கொடு மாநரகத் தழுந்தாமே காத்தாட்கொள்ளும் குருமணியே'' என்றார் ஆனந்த மாலையில் (பாடல்-4)

குரு மணியானவர், மாணிக்கவாசகரை நான்கு செயல்கள் செய்து ஆட்கொண்டுள்ளார்.

(1) தம்மிடம் வைத்திருந்த திருநீற்றை மாணிக்க வாசகருக்கு அணிவித்தார். இதனை,

முன்னீறும் ஆதியும் இல்லான் முனிவர் குழாம்
பன்னூறு கோடி, இமையோர்கள் தாம் நிற்பத்
தன் நீறு எனக்கருளி.

(திருப்பொன்னூசல் 2)

என்றும்,

''தன் சுண்ண வெண்ணீறு அணிவித்துத்
தூய்நெறியே சேரும் வண்ணம்
அண்ணல் எனக் கருளியவாறு ஆர் பெறுவார்

(அச்சோப்பதிகம்-4)

என்றும் மாணிக்கவாசகர் கூறியவற்றால் அறியலாம்.

(2) அடுத்துக் குருமணியானவர், மாணிக்கவாசகருக்கு இட்டலிங்கப் பெருமானை அவர் கையில் எழுந்தருளிச் செய்தார். இதனை

மாலமுதப் பெருங்கடலே மலையே
உன்னைத் தந்தனை.'' (திருச்சதகம்-26,

என்றும்,

''தந்தது உன் தன்னை''

(கோயில் திருப்பதிகம்-10)

என்றும் மாணிக்கவாசகர் கூறியவற்றால் அறியலாம்.

இதனையே தடக்கையின் நெல்லிக்கனி என்றும் வியந்தார்.

(திருவண்டப் பகுதி-162)

(3) அடுத்து ஐந்தெழுத்தை உபதேசித்தருளினார். இதனை,

என்னை ஓர் வார்த்தையுட் படுத்துப் பற்றினாய்

என்றும்,

(செத்திலாப் பத்து-2)
(வார்த்தை ஐந்தெழுத்து)

நீக்கி முன்எனைத் தன்னொடும் நிலாவகை
குரம்பையிற் புகழ் பெய்து
நோக்கி நுண்ணிய நொடியன சொற் செய்து

(அதிசயபத்து 8)

என்றும், (சொற்செய்து உபதேசித்து)

நானேயோ தவம் செய்தேன் சிவாயநம எனப் பெற்றேன்
(உபதேசிக்கப் பெற்றேன்) (திருவேசறவு 10)

என்றும் கூறிய வரிகளால் உணரலாம்.

(4) குருமணியானவர், தம் திருவடியை மாணிக்க வாசகர் தலை மீது வைத்துத் திருவடி தீக்கை செய்தருளினார். இதனை,

''இருங்கழல் சென்னியில் வைத்த சேவக''
(போற்றித் திருவகவல்-129, 130)

என்றும்,

''இ'' பூவார் அடிச்சுவடு என் தலைமேற்
பொறித்தலுமே
தேவான வாபாடித் தெள்ளேணம் கொட்டாமோ''
(திருத்தெள்ளேணம்)

என்றும்,

இணையார் திருவடி யென் தலைமேல் வைத்தலுமே
துணையான சுற்றங்கள் அத்தனையும்
துறந்தொழிந்தேன்
(திருப்பூவல்லி)

என்றும்,

''சீரார் திருவடி என் தலைமேல் வைத்தபிரான்''
(ஷ-10)

என்றும் பாடியமையால் அறியலாம்.

குருமணி உபதேசித்த ஐந்தெழுத்து, உள்ளத்திலும், அவர் தம் திருவடி தலைமீதும் இருந்த நிலையைத்தான் சிவபுராணத் தொடக்கத்தில் ''நமச்சிவாய வாழ்க நாதன் தாள் வாழ்க'' என்றார் மாணிக்கவாசகர்.

சிவ சின்னங்களாக விபூதி உருத்திராக்கம் என்பனவற்றைக் கூறுவர் சமய நூலார். ஆனால் மாணிக்கவாசகர் தாம் கண்ட குருமணியோ சிவபெருமானோ உருத்திராக்கம் அணிந்தவர்களாகக் கூறவில்லை.

''பூசுவதும் வெண்ணீறு பூண்பதுவும் பொங்கரவம்''
(திருச்சாழல்-1)

என்பது போலப் பலவிடங்களில் திருநீற்றையும் அரவத்தையும் சிவபிரான்பால் சார்த்திக் கூறினாரேயன்றி, உருத்திராக்கத்தைக் கூறவில்லை. குருமணியாகச் சிவபிரான் எழுந்தருளியபோதும் அடியார் வேடத்துக்குரிய சின்னங்களுள் ஒன்றாகிய உருத்திராக்கம் அணிந்திருக்கவில்லை. இதனால் மாணிக்கவாசகர் காலத்தில் தமிழகத்தில் உருத்திராக்கம் செல்வாக்குப் பெறவில்லையோ என எண்ண வேண்டியுள்ளது.



# 6. மாணிக்கவாசகர் கண்ட குருமணி

மாணிக்கவாசகர், திருப்பெருந்துறைக் கோகழியில் வந்து தம்மை யாட்கொண்ட குருமணியைக் கண்ட காட்சி வியத்தற் குரியதாகும்.

சிவபிரானே குருபரனாகி வந்து தன் திருவடிகளைத் தமது சென்னியில் வைத்தாள் என்றும், அவனே தம்கையில் தன்னை இட்டலிங்கமாக எழுந்தருளச் செய்தான் என்றும் கூறினார்.

''அருபரத் தொருவன் அவனியில் வந்து
குருபரனாகி... ... ... ... ... ... ... ...
... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...
மெய்தரு வேதியனாகி வினைகெடக்
கைதர வல்ல கடவுள் போற்றி''
(போற்றித் திருவகவல் 75, 76, 88, 89)

என்பது அவர் வாக்கு. (கை தரவல்ல என்றது, தன்னை இட்டலிங்கமாகக் கைக்கண் தந்தமையைக் குறித்தது 'கைத்தர' என்பது எதுகை நோக்கிக் 'கைத்தர' என நின்றது)

குருபரனாகி வந்த சிவபிரானை முற்றுந் துறந்த முனிவர் கோலத்தில் கண்டார். அதாவது கோகழிக் குருமணியை அவர்தம் தேவியாருடன் வந்திருந்த நிலையிலேயே கண்டார், அதனால்தான் மாணிக்கவாசகர்,

''மருவார் மலர்க்குழலி மாதினொடும் வந்தருளி
அருவாய் மறைபயில் அந்தணனாய் ஆண்டுகொண்ட
திருவான தேவன்.''

(திருக்கோத்தும்பி 14)

என்றும்,

''நானும்என் சிந்தையும் நாயகனுக் கெவ்விடத்தோம்
தானும்தன் தையலும் தாழ்சடையோன்
ஆண்டிலனேல்' (ஷை 75)

என்றும்,

''அரையாடு நாகம் அசைத்தபிரான் அவனியின் மேல்
வரையாடும் மங்கைதன் பங்கொடும் வந்தாண்டதிறம்''

(திருத்தெள்ளேணம் 6)

என்றும்

''குணங்களும் குறிகளும் இலாக் குணக்கடல்
கோமளத் தொடும் கூடி
அனைந்துவந்தெனை ஆண்டுகொண்டருளிய
அற்புதம் அறியேனே

(அற்புதப்பத்து 6)

என்றும்,

தெங்குலவு சோலைத் திருவுத்தர கோசமங்கை
தங்குலவு சோதித் தனியுருவம் வந்தருளி
எங்கள் பிறப்பறுத்திட் டெந்தரமும் ஆட்கொள்வான்
பங்குலவு கோதையும் தானும் பணிகொண்ட.
கொங்குலவு கொன்றைச் சடையான்,''

(திருப்பொன்னூசல் 7)

என்றும் உமையொருபாகனாய்க் குருமணிவந்து ஆட்கொண்டமையைக் கூறினார்.

இதை வலியுறுத்தும் வகையில் பிறிதொரு சான்றும் காணலாம். அடியவர் சூழ எழுந்தருளி வந்த குருமணி, அவர்கட்கருளிய போதும் தேவியாருடன் இருந்தார் என்றே கூறுகின்றார்.

''வாரே நீளமென் முலையாளோடு உடன் வந்தருள
அருள்பெற்ற
சீரே றடியார் நின்பாதம் சேரக் கண்டும்
கண்கெட்ட ஊரே றாயிங் குழல்வனோ''
(திருச்சதகம் 53)

எனத் தேவியாருடன் வந்து அடியவர்க்கருளியதைத் தம் கண்களால் கண்டதாகவே கூறினார்.

இலிங்க வடிவம் சிவபிரானின் அருவுருவ வடிவம் என்பர்; அவ்வடிவம் சத்தியும் சிவமும் சார்ந்த வடிவம். சத்தியும் சிவமுமாக அமைந்த இட்டலிங்க வழிபாட்டை மேற்கொள்ளச் செய்து தாமும் தேவியாருடன் எழுந் தருளிய நிலையிலேயே காட்சி தந்தார் என்னலாம்.

சாதாரண மனிதன் ஞானநிலை யெய்திப் பிறர்க்கு உபதேசிக்கும் குருவாய் விளங்கின் அவனைச் சிவனெனவே கொள்ளவேண்டும். என்பதும், சிவனே அக்குருவாய் வந் தான் எனக் கொள்ளவேண்டும் என்பதும் சாத்திரக் கொள்கை. அந்நிலையில் மாணிக்க வாசகருக்கு அருளிய குருமணியையும் நாம் கருதுவதாயினும் அவர் தேவியா ருடன் வந்ததில் குறையில்லை. தேவியாருடனிருந்தே பற்றற்ற நிலையில் இருத்தல் ஞானிகள் இயல்பு. இதற்குச் செவிவழிச் செய்தி என்று கூறலாம்.

திருப்போரூர்ச் சாந்தலிங்க அடிகளார், தம் மாண வர்க்கு ஒரு நாள் துறவற நிலையை விவரித்தபோது, கேட் டிருந்த மாணவருள் இருவர், தனிமையில் ''துறவறத்தைப் பற்றி விவரிக்கும் அடிகளார் தம் மனைவி ஞானம்பிகை யுடன் இல்லறம் நடத்துகின்றாரே எப்படி?'' எனப் பேசிக் கொண்டார்களாம். மறுநாள் பாடம் நடத்தத் தொடங் கும்போது அடிகளார் தம் மனைவியார் ஞானம்பிகையை அழைத்துத் தன் இடது துடைமீது இருக்கச் செய்து பாடம்

நடத்தினாராம். அதுகண்ட அம்மாணவர் அடிகளாரின் தோற்றம் உமையொரு பாகனின் தோற்றமாகத் தெரியத் தம் குற்றத்துக்கு வருந்தி அடிகளிடம் வணங்கி மன்னிப்பு வேண்டினராம். இச்செய்தியை நோக்கின்;

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப்படும்

என்னும் திருக்குறளின் பொருள் விளக்கம் புலப்படும்.

வீரசைவ நெறி தமிழகத்தில் மிகுதியும் பரவிய காலத்தில், வீரசைவர்கள், தமக்குரிய ஒழுக்கத்தில் மற்றைச் சைவர்களைவிட முறை வழுவாது ஒழுகிய காரணத்தால், அவர்களைக் குறிக்கும்போது 'மடத்தாரி' என்று குறித்தனர். அவர்கள் வீடு மடம் என்றே குறிக்கப்பட்டது. இன்றும் தென்னார்க்காடு மாவட்டத்தில் வீரசைவர்களை மடத்தார் என்றும் அவர்கள் வீட்டை மடம் என்றும் குறிப்பிடும் வழக்கம் உண்டு.

இனி மாணிக்கவாசகரின் குருமணி மனிதனாக இருந்து ஞான நிலையெய்தியவர் என்று கொள்வதைவிட இறைவனே குருமணியாய் எழுந்தருளினான் எனக்கொள்வதே உண்மையாகும். மாணிக்கவாசகரின் மேலே காட்டிய பாடல் வரிகளே சான்றுபகரும்.

மேலும் ஒருசான்று வருமாறு:
தோலும் துகிலும் குழையும் அருள்தோடும்
பால்வெள்ளை நீறும் பஞ்சாயத்தும் பைங்கிளியும்
சூலமும் தொக்க வளையும் உடைத்தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ
(திருக்கோத்தும்பி 18)

என்னும் பாடலில் உமையொருபாக வடிவுக்கு ஏற்றவாறு ஆடையாகத் தோலும் நூலாடையும், காதணியாகக்

குழையும் தோடும், பூசுதற்கு வெண்ணீறும் சாந்தும், கையில் சூலமும் கிளியொடு வளையலும் கூறப்பட்டமை காண்க. இவையாவும் இறைவனது தொன்மைக்கோலம் என்றார் மாணிக்கவாசகர். ''மேற்கூறிய அடையாளங்கள் இப்போது குருமணியாகவுள்ள வடிவில் இல்லையென்றாலும் இக்குருமணி உமையொருபாகனேயாதலின் இப்போதுள்ள கோலத்தைத் தொன்மைக்கோலமாகவே கண்டு தும்பியே! நீ ஊதுவாயாக'' என்று கூறுவதன் நோக்கம், குருமணி தேவியாருடன் இரண்டு உருவில் எழுந்தருளியிருந்தாலும் அவர் ஓர் உருவாய உமையொருபாகனேயாவர் என்பதைத் தெரிவித்தலேயாம்.

எப்படியாயினும் மாணிக்கவாசகர் கண்ட குருமணி, தம் தேவியாருடன் இருந்தவர் என்பது தெளிவு.



# 7. மாணிக்கவாசகர் வீரசைவர் - சில குறிப்புகள்

மாணிக்கவாசகர் வீரசைவர் என்பதற்கு அவரது திருவாசகத்தில், கோயில் திருப்பதிகத்தில் வரும்,

'இறைவனே நீ என் உடலிடம் கொண்டாய்' (5)
'எந்தையே ஈசா உடலிடம் கொண்டாய்' (10)

என்னும் தொடர்களை அகச்சான்றாகக் காட்டுவர் இவை தவிர மேலும் சில குறிப்புகளைக் காணலாம்.

(1) சிவபிரானைப் பரவாமல் தக்கன் செய்த யாகத்துக்குச் சென்ற தேவர்கள் சிவபிரான் அம்சமான வீரபத்திரரால் புண்பட்ட செய்தியை மாணிக்கவாசகர்,

பண்பட்ட தில்லைப் பதிக்கரசைப் பரவாதே
எண்பட்ட தக்கன் அருக்கன் எச்சன்இந்துவனல்
விண்பட்ட பூதப் படைவீர பத்திரரால்
புண்பட்ட வாபாடிப் பூவல்லி கொய்யாமோ

(திருப்பூவல்லி 4)

எனப் பாடியுள்ளார்.

தக்கன் செய்த வேள்வியை வீரபத்திரர் சிதைத்த செயல் மாணிக்கவாசகருக்குப் பெரிதும் போற்றத்தக்கதாய் இருந்ததுபோலும். பலவிடங்களில் தக்கயாகம் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். இருபது பாடல்கள் கொண்ட திருவுந்தியார் என்பதில் பன்னிரண்டு பாடல்கள் தக்கன் வேள்வி பற்றியனவாகவே உள்ளன.

வீரசைவர்கள் வீரபத்திரரைப் பெரிதும் போற்றி வருபவர்கள். இன்றும் குப்பகோணம் சாரங்கதேவர் திருமடத்தில் வீரபத்திரர் வழிபாடு காணலாம்.

தென்னாற்காடு மாவட்டத்தில் திண்டிவனம் புலவர் பாலசுந்தரம் வீட்டிலும், துரவி என்னும் ஊரில் பால சுப்பிரமணியம் வீட்டிலும் பண்டரக்கோட்டை குரு சாந்தய்யர் வீட்டிலும், மாளிகை மேடு மடத்திலும் வீரபத்திரர் கோயிலமைத்து வழிபாடு செய்து வருதலைக் காணலாம், சிறப்பாகக் கன்னடிய வீரசைவர் வீடுகளில் காணலாம்-வீரபத்திரர் திருவுருவில்தலையிலோ மார்பிலோ சிவலிங்கம் பொறிக்கப் பட்டிருத்தலை நோக்கின் வீர சைவர்கள் வீரபத்திரர் வழிபாட்டில் ஈடுபட்டவர்கள் என்பதை அறியலாம்.

(2) படமாக என்னுள்ளே தன்னிணைப்போ
தவையளித்துஇங்கு
இடமாகக் கொண்டிருந்து ஏகம்பம் மேயபிரான்
(திருப்பூவல்லி-14)

என்பதில் மாணிக்கவாசகர் சிவபிரான் என் உள்ளத்தில் தன் இரண்டு திருவடித்தாமரைகளையும் படம் போலப் பதியுமாறு அருள் செய்ததோடு, என் உடம்பையும் தான் கோயில் கொள்ளும் இடமாகக் கொண்டு இருந்தும் காஞ்சி ஏகம்பத்தும் தங்கிய பெருமான்'' என்று கூறியது கொண்டு, ''இங்கு இடமாகக் கொண்டிருந்து'' என்பது உடலிட மாகக் கொண்டதைக் குறிக்கும் என்னலாம்.

(3) ... ... ...அடியார்முன்
வேண்டுந் தனையும்வாய்விட் டலறி
விரையார் மலர்தூவிப்
பூண்டு கிடப்ப தென்று கொல்லோஎன்
பொல்லா மனியைப் புணர்ந்தே
(புணர்ச்சிப்பத்து-3)

''இப்போதுயான் இட்டலிங்கப் பெருமானைச் செச்சை யில் வைத்து உடலில் பூண்டிருந்தாலும் இறைவனுடன் ஐக்கியப்படாமல் பூண்டுள்ளேன்'' என்று எண்ணிய மாணிக்கவாசகர், ''அடியார் முன்னிலையில் துளைபடாத மணியாகிய இறைவனைப் புணர்ந்து (மனதால் ஐக்கியப் பட்டு) வேண்டியவாறு வாய்விட்டு அலறி மணமலர் தூவி என் உடலில் பூண்டு கிடப்பது எந்நாளிலோ'' என்று ஏங்கிக் கூறினார்.

(4) ஊனார் உடல் புகுந்தான் உயிர் கலந்தான் உளம்பிரியான்'' என உயிருண்ணிப் பத்து இரண்டாம் பாடலில் இறைவனைக் குறிப்பிடுகின்றார் மாணிக்க வாசகர்.

'உடல் புகுந்தான்' என்பது உடலிடங்கொண்டான் என்பதைக் குறிக்கும், 'உயிர் கலந்தான்' என்பதும் 'உளம் பிரியான்' என்பதும் உயிரில் இறைவன் கலந்திருத்தலைக் குறிக்கும். 'உடல் புகுந்தான்' என்பது உடலில் கலந் திருத்தலைக் குறிக்கும். இதில் 'ஊன் (தசை) ஆர் உடல்' என்ற அடையால் வாளா உடலையே குறிக்கும் என்ன லாம். உயிரிலும் உள்ளத்தும் கலந்தும் பிரியாது இருந் தான் என்றதாலேயே உயிர் கலந்த உடலிலும் கலந்தான் என்பது தானே புலப்படும். அதனால் உடல் கூறவேண்டுவ தில்லை. கூறியிருத்தலால் 'ஊனார் உடல் புகுந்தான்' என்றது வெளித்தோற்றமாக உடலில் (இட்டலிங்கமாக) இடம் கொண்டதையே குறிக்கும்.

(5) ஊனே புகுந்த உனை யுணர்ந்தே
உருகிப் பெருகும் உள்ளத்தைக்
கோனே அருளுங் காலந்தான்
கொடியேற்கு என்றோ கூடுவதே''

எனவரும் பிரார்த்தனைப்பத்தும் பத்தாம் பாடலில் 'ஊனே புகுந்த' என்பது உடலிடங்கொண்டதைக் குறிக்

கும். ''என் உடல் இடம் கொண்ட நின்னை என் உள்ளமானது இருவரையும் உணரவில்லை. அது உணர்ந்து அன்பு பெருகி உருகுமாறு உள்ளத்துக்கு அருளும் காலம் கொடிய எனக்குக் கூடுவது என்றோ'' எனப் பிரார்த்திக்கின்றார் மாணிக்கவாசகர்.

(6) திருவம் மானைப் பகுதியில் பதின்மூன்றாம் பாடலில் ''சேர்ந்தறியாக்கையானை'' என்பது குறிப்பிடப்பட்டுள்ளது. அதற்குப் பொருளாகத் ''தனக்கு மேம்பட்டாரில்லாமையால் தொழுவதற்காகச் சேர்ந்து (கும்பிட்டு) அறியாத கையையுடைய சிவனை'' என்பதைக் கூறுவர், பின்வருமாறும் பொருள் கூறலாம். ''தன்னையன்றிப் பூசனைக்காகப் பிறதேவர் சேர்ந்தறியாத என்கையை இடமாகக்கொண்ட சிவனை'' என்றும் கூறலாம். இது இறைவனைக் கையில் வைத்துப் பூசனை செய்வதைக் குறித்ததாகும். ''என்கை பூசனைக்காகப் பிறதேவரை வைத்துப் பூசிப்பதில்லை'' என்று மாணிக்கவாசகர் குறிப்பிடுவதாகக் கொள்ளலாம்.

(7) எந்தை யாயெம் பிரான்மற்றும் யாவர்க்கும்
தந்தை தாய்தம் பிரான்தனக் கஃதில்லான்
முந்தி யென்னுள் புகுந்தனன் யாவரும்
சிந்தை யாலும் அறிவரும் செல்வனே.

இது திருச்சதகத்து நாற்பத்தேழாம் பாடல். இதில் 'முந்தி என்னுள் புகுந்தனன்' என்பது 'முற்பட்டு என் உடலில் இடம் புகுந்தனன்' என்னும் பொருளுடையது. 'யாவரும் தம் சிந்தையாலும் அறிவரும் செல்வனாகிய இறைவன் முற்பட்டு என் உள்ளத்தில் புகுந்தனன்'' என்று பொருள் கூறுவதைவிட ''யாவரும் தம் சிந்தையாலும் அறிய இயலாத இறைவன், மிக எளிமையாக என் உடம்பில் ஊனக் கண்ணால் யான் காணுமாறு இடம் புகுந்தான்'' என்று கூறுவதே சிறக்கும்.

பிற்காலச் சிவப்பிரகாசரும் தம் பிரபுலிங்க லீலையில் சிவபிரான் வணக்கம் கூறும்போது

> பூவாய் நெடுங்கோட் டுறுபசுந்தேன்
> கைகால் முடங்கு பொறியிலிதன்
> நாவாய் ஒழுகிற் றெனவுலகம்
> அளந்த மாலும் நான் முகனும்
> காவாய் எனநின் றேத்தெடுப்பத்
> தானே வந்தெங் கரதலத்தின்
> மேவா அவர்ந்த மாமணியைத்
> தொழுதுவினைக்கு விடைகொடுப்பாம

என்று கூறியதில், ''திருமாலும் அயனும் காவாய் என வேண்டி நிற்க அவர்க்கு தராமல் தானே என் கரதலத்தில் வந்து விரும்பித்தங்கினான் இறைவன்'' எனக் கூறுமுகத் தால்தான் இட்டலிங்க பூசை செய்வதைக் குறிப்பிட்டார், சிவப்பிரகாசருக்கு மாணிக்கவாசகரின் மேற்பாடல் துணை செய்திருக்கலாம்.

இப்படிப் போலப் பலவிடங்களில் மாணிக்கவாசகர் வீரசைவர் என்பதற்கான அகச்சான்றுகளைத் திருவாசகத் திற் காணலாம். முன்னர் யான் எழுதிய சில கட்டுரை களும் சான்றாம்.

□ □ □

# 8. மாணிக்கவாசகர் அச்சம்

பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பு சிதம்பரத்தில் வடக்குத் தெருவில் ஓர் வீட்டில் குடியிருந்த டாக்டர் வை. இரத்தினசபாபதி அவர்களுடன் நான் தங்கியிருந்த நாள்களுள் ஒருநாள், கும்பகோணம் சாரங்கதேவர் மடத்துச் சுவாமிகள், நடராசப்பெருமாள் கோயிலுக்குச் சென்றிருக்கிறார்கள் என்று கேள்விப்பட்டு யானும் டாக்டர் அவர்களும் சுவாமிகளைக் காணச்சென்றோம். சுவாமிகள் தில்லைக் கூத்தன் முன்னே தமது வலக்கையைத் தம் மார்பளவில் வைத்து ஆசீர்வாதம் செய்வது போல நின்று கூத்தரசனைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். இரு கைகளையும் கூப்பித் தொழாமல் ''என் உடலிடங்கொண்ட சிவபிரானே! இப்பொது மன்றத்திலிருந்து ஆடும் நீ நலமா?'' என்று கேட்பது போல இருந்தது அவரது தோற்றம், அதன் காரணம் என்ன? வீரசைவன் தன் இட்டலிங்கத்தைத் தவிர வேறு தெய்வத்தை வழிபடல் இல்லை. அத்தெய்வம் திருக்கோயிலில் இருந்தாலும் அதற்கு மதிப்புத் தருமளவேயன்றி வழிபடுதல் இல்லை.

தன் உடலிடங்கொண்ட சிவனையே திருக்கோயிலில் சென்று வழிபடாத வீரசைவன் சிவனையன்றி வேறு தெய்வத்தை வழிபடுவானோ? வேறு தெய்வங்களை மட்டுமன்றி நவக்கிரகங்களைத் தெய்வம் என வழிபடுவானோ

ஒருகால் (1940-ல்) திருப்பாதிரிப்புலியூர் ஞானியாரடிகளிடம் (ஐந்தாம் பட்டம்) தொண்டு புரிந்து வந்த போது

அவர்கள் திருக்கோயிலுக்குச் சென்றால் நவக்கிரகங்களை வலம் வராமைக்குக் காரணம் வேண்டியபோது ''சென்று நாம் சிறு தெய்வம் சேர்வோம் அல்லோம், சிவபெருமான் திருவடியே சேரப் பெற்றோம்'' என்று அப்பரடிகள் கூறியதை எடுத்து விளக்கினார்கள். இன்றும் ஞானியாரடி களின் மாணவர்கள் நவக்கிரக வழிபாடு செய்வதில்லை. ஆனால் 'தெய்வம் இகழேல்' என்பதற்கேற்ப எல்லாத் தெய்வங்களுக்கும் மதிப்பளிப்பதில் தவறுவதில்லை.

கோயிலுக்குச் சென்று வழிபடுவது என்பது உலகத் தோடு ஒட்ட ஒழுகல் ஆகும். வீரசைவன் கோயிலில் குருக் கள் தரும் திருநீறு பெறுவதில்லை. ஏன் எனில் குருக்கள் வீரசைவன் இல்லை வீரசைவன் தரும் திருநீறே வீரசைவன் பெறுதல்வேண்டும். மயிலம்-பொம்மபுர ஆதீன சந்நிதா னங்கள் (இன்றும் 19-ஆம் பட்டம்) உலக நடைக்கேற்பத் திருக்கோயிலுக்குச் சென்றால் குருக்கள் தரும் திருநீற்றைப் பெறுதல் இல்லை, குருக்கள் ஓர் தட்டில் சிறிய இலையில் திருநீற்றை வைத்துச் சந்நிதானத்திடம் ஏந்த அவர்கள் எடுத்துக் கொள்வதையே மரபுவழிச் செயலாகக் கொண் டிருப்பதைக் காணலாம்.

எனவே வீரசைவன் தன் இட்டலிங்க வழிபாட்டைத் தவிர வேறு தெய்வத்தை வழிபட மாட்டான் அதிலும் சிறுதெய்வ வழிபாடு அவனுக்கு இழிவுதரும்.

மாணிக்கவாசகர் தம் காலத்தில் சிவவழிபாட்டை மேற் கொண்டவர்கள் திருமால் முதலிய பிறதெய்வங்களையும் சிறுதெய்வங்களையும் வழிபடுதலைக் கண்டார். அதனால் அவர் அவர்களைக் கண்டு அஞ்சினார். அவர்கள் கற்றவரா யிருந்தாலும் கற்றிலாதவர் என்றும் (அச்சப்பத்து 1) அறிவிலாதவர் என்றும் (ஷை-8) அன்பிலாதவர் என்றும் (ஷை-3) ஆணலாதவர் என்றும் (ஷை-10) நினைத்தார்.

அஞ்சினார் அவர் அஞ்சத்தக்கனவாகப் புற்றில் உள்ள பாம்பு, பொய்யரின் மெய் (மேற்படி-1) பேரவா, அதனால் வரும் வினைகள் (மேற்படி-2), பகைவரின் வேல், தீயமகளிரின் கண்கள் (மேற்படி-3), அவர்தம் சொல், புன்முறுவல் (மேற்படி-4) அவர்தம் சேர்க்கையால் வரும் பிணி, பிறப்பு இறப்பு (மேற்படி-5), நெருப்பு, மலைபுரண்டு உயிரழிய வருதல் (மேற்படி-6) தமக்கு வரும்பழி (மேற்படி-7), மதம் கொண்ட யானை, புலி (மேற்படி-8) இடி, மன்னர் உறவினர் பகை (மேற்படி-9), பகைவர் எய்யும் அம்பு, முடிவில் வரும் கூற்றுவன் (மேற்படி-10) என்பனவற்றைக் கூறி அவற்றுக்கெல்லாம் அஞ்சமாட்டேன். ஆனால் சிவபிரானைத் தவிர மற்றும் ஓர் தெய்வம் உண்டு என எண்ணி வழிபடுவாரைக் கண்டால்தான் அஞ்சுவேன் என்றார். இவ்வாறு அஞ்சக் காரணம் என்ன?

மேற் கூறப்பட்ட அச்சப் பொருள்களால் வரும் துன்பங்கள் மூன்று வகையில் அடங்கும். 1. தன்னால் வருவன, பிறவற்றால் (பிறரால்) வருவன, 3. இயற்கையால் வருவன என்பன அவை. பேரவாவால் வரும் வினைத் துன்பங்கள் தன்னால் செய்யப்பட்டு வருவன. நெருப்பு, மலை, இடி இவற்றால் வருவன இயற்கையால் வருவன. மற்றையன யாவும் பிறவற்றால் (பிறரால்) வருவன. இவற்றை இறைவனருளால் போக்கிக் கொள்ளமுடியும். புத்தன் தலையில் இடிவிழச் செய்த மாணிக்கவாசகருக்கு அவற்றை வெல்லுதல் எளிதாகும். அதனால் அவற்றுக்கு அஞ்சவில்லை.

தாம் வழிபடும் சிவபிரானைத் தவிர வேறு தெய்வம் உண்டு. என வழிபடுபவருக்கே அஞ்சினார் ''அத்தேவர் தேவர் அவர்தேவர் என்று இங்ஙன், பொய்ந்தேவு பேசிப் புலம்பு இன்ற பூதலத்தில்'' (திருக்கோத்தும்பி 5) சிவபிரானை வணங்குபவனும் அத்தேவர்களைத் தெய்வம் என வணங்குவதைக் கண்டு அஞ்சினார், ஏன்?

இட்டலிங்கப் பெருமானை வணங்குபவன் வேறு தெய்வத்தை வணங்குவனாயின் அவன் தன்னிடத்துள்ள பெருமானை நம்பாதவன் பிற தெய்வத்தை மட்டும் எப்படி நம்புவான்? தனக்குள்ள நோயைத் தீர்க்கத் தன்னிடத்துள்ள இறைவனை நம்பாமல் வேறிடங்களில் உள்ள தெய்வம் ஒன்றை வணங்குவானாயின் அத்தெய்வத்தையே நம்பினான் என்று சொல்ல இயலுமோ? அதையும் நம்பாமல் மற்றொரு தெய்வத்தையும் அவன் நாடுவான் அல்லனோ? அது தெய்வத் துரோகம் ஆகாதோ! தெய்வத் துரோகியாகிய அவன் தான் மட்டும் கெடுவதல்லாமல் தன்னைச் சார்ந்தவரையும் தன் செயல் மூலம் கெடச் செய்தவனாகிறான். இப்படியே பலரும் கெடக்காரணனாக அவன் ஆதலின் அவனைக் கண்டு மாணிக்கவாசகர் அஞ்சினார்.

பிற தெய்வம் அருளும் வீடுபேறு என்பது கானல் நீர் போல்வது. பிற அறுவகைச் சமயங்கள் கூறும் வீடுபேற்று வழிகளை நம்பிச் செல்வது எது போன்றது எனின், கானல் நீரினை மான்கள் நல்லநீர் என்று சென்று அருந்துவது போல் எண்ணிச் சோர்ந்து மடிதல் போல்வதாகும்.

''இருமுச் சமயத்து ஒருபேய்த் தேரினை
நீர்நசை தரவரும் நெடுங்கண் மான்கணம்
தவப்பெரு வாயிடைப் பருகித் தளர்வொடும்
அவப்பெருந் தாபம் நீங்காது அசைந்தன,''
(திருவண்டப் பகுதி-79-82)

என்று மாணிக்கவாசகர் கூறியது காணலாம். அதனால் பொய்த்தேவரை மெய்த்தேவர் என்றுதான் ஏமாந்ததோ அன்றிப் பிறரையும் ஏமாறச் செய்து கெடுக்கும் காரணத்தால்தான் பிறிதோர் தெய்வம் உண்டு என்பவரைக் கண்டு அஞ்சினார்.

''யாதொரு தெய்வம் கொண்டீர்
அத்தெய்வ மாகி ஆங்கே
மாதொரு பாகனார்தாம் வருவர்''

என்பது சைவசித்தாந்தம். அதற்கேற்ப எத்தேவரை வழிபட்டாலும் சிவபிரானே அருள் தருவான் ஆதலின் திருமால் முதலிய தேவரை வழிபடலாமே? என வினவலாம், திருமால் பார்வதியாகி இறைவன் பால் உள்ளான் என்பர். ''அரியலால் தேவியில்லை ஐயன் ஐயாறனார்க்கே,'' என்றார் அப்பரடிகள்.

இக்கொள்கையை வீரசைவம் ஏற்கவில்லை. இட்டலிங்கப் பெருமானையன்றி வேறு வடிவத்தில் இறைவனை வழிபடுதல் தவறு என்பதே கொள்கை. மாணிக்கவாசகர் தம் திருவாசகப் பாடல்களில் யாதோரிடத்தும் சிவபிரான் மற்றைத் தேவர் உருவிலும் அருள் தருவான் எனக் கூறவில்லை. ''புவனம், நீர், தீ, காற்று, இயமானன், வானம், இருசுடர் (திருச்சதகம் 63) வடிவானவன் என்றாரேனும் தேவர்கள் வடிவில் இருந்தருள்வான் என்று யாண்டும் கூறவில்லை.

அத்தேவர்களை நினைத்தாலே அருவருக்க வேண்டும் என்பது அவர் கூற்று. அதனால் அவர். ......... எம்பிரான் தம்பிரானாம்.

திருவுரு வன்றி மற்றோர்
தேவர் என்ன அருவராதவர் என்ன
அருவராதவரை கண்டால்
அம்மநாம் அஞ்சுமாறே

(அச்சப்பத்து-2)

என்றார்.

மாணிக்கவாசகர் போல்வார் அக்காலத்தில் கொண்ட கொள்கைகளே அவர்க்குப் பிற்காலத்தில் வீரசைவக் கோட்பாடுகளாயினவோ என எண்ண வேண்டியுளது.

# 9. மாணிக்கவாசகரின் கடவுட்காட்சி

சிவபெருமானை நேரிற் கண்டவர்களைப் பற்றிக் கேள்விப்பட்டதில்லை (திருப்பள்ளி யெழுச்சி 5) என்று கூறிய மாணிக்கவாசகர், ''கண்ணால் யானும் கண்டேன் காண்க'' (திருவண்டப்பகுதி 53) எனத் தாம் கண்டதாகக் கூறினார். அவர் கண்ட காட்சி ஐந்து வகையில் அமையும்,

## 1. உலகவர் காணும் பொதுக்காட்சி

உலக மக்கள் தாம் கேட்டும் கற்றும் அறிந்தபடி இறைவனைக் கருத்திற் காணுதல் உண்டு. அம்முறையில் மாணிக்கவாசகர் இறைவனைக் கண்டு களித்துள்ளார், அதற்கேற்ப இறைவனின் இயல்பும் வடிவும் கூறிப் பாடி யுள்ளார். தாம் திருப்பெருந்துறைக் கோகழிக் குருமணி யைக் காணுதற்கு முன்னர், பாண்டிய மன்னனின் அமைச்சராக இருந்தபோதும் அதற்கு முன்னரும், சிவ பிரானை மற்றைய மக்களைப்போலத்தான் சிலை வடிவில் கண்டார்.

முப்புரம் எரித்தது, மால் அயன் காணாமை, தக்கன் வேள்வி தகர்த்தது, திருமால் ஆயிரம் தாமரைகொண்டு வழிப்பட்டது முதலிய செய்திகள் தாம் கேட்டறிந்தன வாதலின் அவற்றைத் தம் பாடலில் பாடினார்.

"மெய்யிலங்கு வெண்ணீற்று மேனியாய்"
(திருச்சதகம் 92)

"சந்தனச் சாந்தின் சுந்தர"
(போற்றித் திருவகவல் 203)

என்று கூறியனவெல்லாம் சிவபிரானுக்கு அபிடேகம் செய்ததைப் பார்த்ததனால் ஆகும். அவ்வாறே சிவபிரானுக்கு அலங்காரம் செய்வதைக் கண்டதனால்,

"கழுநீர் மாலைக் கடவுள் போற்றி"
(போற்றித் திருவகவல் 217)

"தாளியறுகின் தாராய் போற்று" (ஷை-201)

எனக் கூறினார்.

கீர்த்தித் திருவகவலில் வரும் தசாங்கத்தில் இறைவன் விரும்பியணியும் மாலை கழுநீர் மாலை (113) என்றும், தலைப்பில் இறைவன் உகந்த மாலை தாளியறுகாம் பாடல் 9) என்றும் கூறியதிலிருந்து அவர் காலத்தில் இறைவனுக்குச் சிறப்பாக அணியப்பட்ட மாலைகள் கழுநீர் மாலையும் தாளியறுகு மாலையும் என அறியலாம். எனவே, மாணிக்கவாசகர் உலகவர் போலவே முற்காலத்தில் இறைவன் (சிலை) உருவத்தைக் கண்டு போற்றியவர் என நாம் உணரலாம்.

## 2. குருமணிக் காட்சி

பாண்டிய மன்னனுக்குக் குதிரை வாங்கச் சென்ற போது, திருப்பெருந்துறைக் கோகழியில் இறைவன், மாணவர் சூழக் குருமணியாய் எழுந்தருளியிருந்து தம்மை ஆட்கொண்ட செய்தியைப்பல பாடல்களில் கூறியுள்ளார்.

அருபரத் தொருவன் அவனியில் வந்து குருபரனாகி
அருளிய பெருமையை விவரிக்குங்கால்
(போற்றி-75, 76)

வினையிலே கிடந்தேனைப் புகுந்து நின்று
போது நான் வினைக்கேடன் என்பாய் போல
இனையன்நான் என்றுன்னை யறிவித்து என்னை
ஆட்கொண்டு எம்பிரான் ஆனாய்

(திருச்சதகம் 22)

என்று விவரித்தார். குருமணியானவர் மற்றையடியவரைத் தம்முடன் கலந்தருளச் செய்து தம்மை மட்டும் உடன் வரவொட்டாமல் நிறுத்தியதை

''நாயி னேனை நலமலி தில்லையுள்
கோல மார்தரு பொதுவினில் வருகென
ஏல என்னை ஈங்கொழித் தருளியும

(கீர்த்தித் திருவகவல் 137-129)

என்று குறிப்பிட்டார்.

குருமணியைக் கண்ட மாணிக்கவாசகர் அவர் மறைவுக்குப் பின்னர், இன்றும் நன்றாகக் காண வேண்டி ஞான நிலையில் உன்னைக் காணவில்லை என்று வருந்தினார். (திருச்சதகம் 84)

## 3. குதிரைச் சேவகக் காட்சி

மாணிக்கவாசகர்க்காக இறைவன் நரிகளைக் குதிரைகளாக நடத்தி வந்தபோது குதிரை வீரன் கோலத்தில் கண்டது குதிரைச் சேவகக் காட்சியாம். அதை,

''மதுரைப் பெருநன் மாநகர் இருந்து
குதிரை சேவகனாகிய கொள்கையும்''

(கீர்த்தி-43, 44)

என்றார். குதிரைச் சேவகனாக வந்தபோது உடுத்திய ஆடை வெள்ளைக் கலிங்கம்; நெற்றியில் திருநீறணிந்திருந்தான். உடம்பில் குப்பாயம் (சட்டை) அணிந்திருந்தான். அக்குப்பாயம் பள்ளிக்குப்பாயமாம், குதிரை வீரன் தான் சென்று தங்கும் இடத்தில் தூங்க வேண்டிவரின் அங்கே அக்குப்பாயத்தையே தரையில் விரித்துப் படுப்பது வழக்க

மாதலின் அக்குப்பாயம் பள்ளிக்குப்பாயம் எனப்படும். அப்படி வெள்ளை உடையும் திருநீற்று நெற்றியும் பள்ளிக் குப்பாயமும் உடையவனாய்க் குதிரைமீது வந்து தம்மைக் கவர்ந்த செய்தியை

வெள்ளைக் கலிங்கத்தர்
வெண்திரு முண்டத்தர்
பள்ளிக் குப்பாயத்தர் அன்னே என்னும்
பள்ளிக் குப்பாயத்தர் பாய்பரிமேல் கொண்டென்
உள்ளம் கவர்வரால் அன்னே என்றும்

(அன்னைப் பத்து 7)

என்று பாடினார் மாணிக்கவாசகர்,

## 4. கூலியாள் காட்சி

வையையாற்றின் பெருக்கை கரைகட்டி யடக்க வந்த என்னும் மூதாட்டிக்காகக் கூலியாளாக இறைவன் வந்த காட்சியும் கண்டவர் மாணிக்கவாசகர். அதை,

''பிட்டு நேர்பட மண்சுமந்த பெருந்துறைப்
பெரும்பித்தன்.''

(திருக்கழுக்குன்றப் பதிகம் 2)

என்றும்,

கண்சுமந்த நெற்றிக் கடவுள் கலிமதுரை
மண்சுமந்து கூலிகொண்டு
அக்கோவில் மொத்துண்டு
புண்சுமந்த பொன்மேனி பாடுதும்!

(திருவம்மானை 8)

என்று பாடினார்.

## 5. இட்டலிங்கக் காட்சி

குருமணியானவர் இட்டலிங்கப் பெருமானைத் தம் கையில் எழுந்தருளுவித்தபோது சிவபிரானை இட்ட லிங்கப் பெருமானாகக் கண்டது ஓர் அரிய காட்சி.

குழந்தை கையிற் பொற் கிண்ணம்போலப் பொருட்படுத் தாது, எளிமையாகக் கருதிய குறையினை நினைந்து, வருந்தினாலும் (திருச்சதகம் 92) ''தடக்கையின் நெல்லிக் கனியாகக் கண்டார்'' (திருவண்டப் பகுதி 162) பல்வேறு ஊர்களில் பல்வேறு வடிவில் காட்டிய காட்சிகளைக் காட்டிலும்—திருக்குழுக்குன்றத்தில் காட்டிய பல்வேறு காட்சிகளைக் காட்டிலும் இட்டலிங்கப் பெருமான் காட்சியே அவர்க்கு மிகச் சிறப்புடையதாகவும் அவை யனுபவம் உடையதாகவும் அமைந்தது. அதனால் அவர்,

''நெல்லிக் கனியைத் தேனைப் பாலை:
நிறையின் னமுதை அமுதின் சுவையைப்
புல்லிப் புணர்வ தென்று கொல்லோ''

(புணர்ச்சிப்பத்து-4)

என்றார்.

மேலே குறித்த ஐவகைக் காட்சிகளுள் இட்டலிங்கப் பெருமான் காட்சியிலேயே மற்றைக் காட்சிகளையும் கண்டார் என்னலாம். அங்கை நெல்லிக் கனியில் அதன் உள்ளீடுகளையும் காணுமாறுபோல, இட்டலிங்கப் பெரு மானிடத்திலேயே குருமணிக்காட்சி, குதிரைச் சேவகக் காட்சி, கூலியாள் காட்சி மற்றைப் பொதுக் காட்சியாகிய காட்சிகளையும் கண்டார் மாணிக்கவாசகர் என்னலாம்.

□ □ □

# 10. அடியார் நடுவுள் இருத்தல்

உடையாள் உன்றன் நடுவிருக்கும்
　　உடையாள் நடுவுள் நீயிருத்தி
அடியேன் நடுவுள் இருவீரும்
　　இருப்ப தானால் அடியேன் உன்
அடியார் நடுவுள் இருக்கும் அரு
　　ளைப்புரியாய் பொன் அம்பலத்தெம்
முடியா முதலே என் கருத்து
　　முடியும் வண்ணம் முன்னின்றே.

என்பது திருவாசகம் கோயில் மூத்த திருப்பதிகப் பாடல். ''பொன்னம்பலத்து முடிவில்லா முதல்வனே, உடையவளாகிய உமையம்மை உன்றன் நடுவில் இருப்பாள் நீ அவள் நடுவில் இருப்பாய். நீங்கள் இருவரும் அடியேன் நடுவில் இருப்பது உண்மையானால் அடியேன் நின் அடியார் நடுவில் இருக்கும்படியான அருளைச் செய்வாயாக'' என்பது பாடலின் பொருள். இதில் உள்ள நடுவில் இருத்தல் என்பதன் பொருள் காணல் நன்று.

மாணிக்கவாசகர் தாம் அடியார் நடுவில் இருக்குமாறு செய்தருள வேண்டுகின்றார். ஏன்?

மாணிக்கவாசகர் காணவே இறைவன் அடியவரை ஆட்கொண்டு உடன் கொண்டு சென்றான். மாணிக்கவாசகரை மட்டும் தில்லைக்கு வருக என்று சொல்லிவிட்டு விட்டுச் சென்றான். அது அவருக்கு மிக வருத்தத்தைத் தந்தது. அதனால் அவர், விச்சுக்கேடு பொய்க்கு ஆகாது என்று இங்கு எனை வைத்தாய்.

இச்சைக் கானார் எல்லாரும் வந்துன் தாள் சேர்ந்தார்'
(திருச்சதகம்-81)

என்றும்

அடியேன் அல்லேன் கொல்லோ தான் எனையாட்
கொண்டிலை கொல்லோ
அடியா ரானார் எல்லாரும் வந்துன்தாள் சேர்ந்தார்.

என்றும் (திருச்சதகம்-83) வருந்தினார். உண்மையடியவனாகத் தாம் இல்லாமையால்தான் இறைவன் தம்மை மட்டும் இங்கேயே இருக்கச் சொல்லி மற்றவரை அழைத்துச் சென்றான் போலும் என எண்ணினார். அதனால் தான் தாமும் அடியார் நடுவில் இருந்தால் உண்மையடியவனாக ஆதலும் இறைவனால் உடன்கொண்டு செல்லப்படுதலும் ஆம் எனக் கருதியே 'அடியார் நடுவுள் இருக்கும் அருளைப்புரியாய்' என வேண்டுகின்றார்.

அடியார் நடுவுள் இருத்தல் என்பதற்கு அடியவர் கூட்டத்துள் இருத்தல் என்பது பொருளாகாது. ஏன் எனின் அடியவர் கூட்டத்தில் இருந்த மாணிக்கவாசகரைத் தில்லைக்கு வருக என்று சொல்லி மற்றவர்களை மட்டும் உடன் கொண்டு சென்றுவிட்டான் இறைவன். எனவே நடுவுள் இருத்தல் என்பதற்கு வேறு பொருள் காணல் வேண்டும்.

இறைவன் நடுவுள் இறைவியும், இறைவி நடுவுள் இறைவனும் இருவரும் மாணிக்கவாசகர் நடுவுளும் இருத்தல் என்பது, நெஞ்சத்துள் இருத்தல் என்பது ஆகும். அப்படி அடியார் நெஞ்சத்துள் தாம் இருத்தல் வேண்டும் என்பதையே அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் புரியாய் என வேண்டுகிறார்.

அடியார் நெஞ்சத்துள் தாம் இருந்தால் அடியாரை உடன்கொண்டு செல்லும்போது தம்மைப்பிரித்தல் இயலாமல் தம்மையும்கொண்டு செல்வன் இறைவன் என்பது மாணிக்கவாசகர் கருத்தாகும்.

அடியவர் நெஞ்சத்துள் மாணிக்கவாசகர் இருத்தல் வேண்டும் என்பது எப்படி முடியும்? அடியவர் அவரை மறவாமல் விடாமல் நெஞ்சத்து நினைதல்வேண்டும். அதற்கேற்ப மாணிக்கவாசகர் அடியவர்க்குத் தொண்டு செய்தல்வேண்டும். அடியவருள் வேறுபாடு காணாமல் அடியவர் வேறு தாம் வேறு என்பதில்லாமல் ஒன்றியிருந்து தொண்டு செய்தல்வேண்டும். அப்போது தான் அடியவர் நெஞ்சில் இருக்க முடியும். எனவே அடியவர்க்குத் தொண்டு செய்து அவர் நெஞ்சத்தமரும் ஒன்றையே மாணிக்கவாசகர் விரும்புகிறார் என அறியலாம். அதாவது அடியவர் நெஞ்சத்தில் ஐக்கியமாவதை விரும்புகிறார் என அறியலாம்.

இறைவன் நடுவில் இறைவியும் இறைவி நடுவில் இறைவனும் இருத்தல் என்பது கடல் நீரில் நீரும் உப்பும் இருத்தல் போல என்னலாமோ எனின் ஆகாது. நீரும் உப்பும் பிரிக்கப்படும். அதனால் நெருப்பும் வெப்பமும் போல இருத்தல் என்னலாம்; பிரித்துக் காண முடியாது. நெருப்பு இருந்த இடத்திலிருக்க அதன் வெப்பம் பரவி அருகிலிருப்பாரைச் சுடும். சூரியன் மேலிருக்க அதன் வெப்பம் பரவுதல் போலக் கொள்ளலாம். இறைவன் இருக்க அவன் நடுவுள் இருக்கும் இறைவி (ஆற்றல்—சக்தி) இறைவனின் நீங்காமல் வெளிப்பட்டு உலகை இயக்கும்.

இப்படி ஒருவர் நடுவுள் ஒருவராக இருக்கும் இறைவனும் இறைவியும் அவ்வைக்கிய நிலையிலேயே மாணிக்கவாசகர் (பொதுவாக உயிர்கள்) நடுவில் இருக்கின்றனர். இவ்விருவரும் மாணிக்கவாசகரின் உயிருடம்பில் நெருப்பும் வெப்பமும் போலப் பிரிவின்றி இருக்கின்றனர். இருந்து அவரின் செயல்களை இயக்குகின்றனர். இதனையுணர்ந்த நிலையில் அவர் இறைவனிடம் ''நீங்கள் இருவரும் அடியேன் நடுவில் இருப்பது உண்மையாயினும் அவ்வளவில் அமையாமல் யான்நின் அடியார் நடுவில் இருக்கும் படியான அருளைச் செய்வாயாக'' என வேண்டுகின்றார்

இறைவனும் இறைவியும் ஒருவர் நடுவில் ஒருவர் இருந்து உலகையியக்குதலும் யாவும் அறிதலும் போல அவ்விருவரும் மாணிக்கவாசகர் நடுவில் இருந்தால் மாணிக்கவாசகரும் யாவும் அறிபவராதல் வேண்டும். அவரால் யாவும் அறிய முடியவில்லை. இறைவனே ''சித்த மலம் அறுவித்துச் சிவமாக்கி'' ஆண்டார். யாவும் அறிய வேண்டுவதாயின் இருவர் நடுவில் தாம் இருத்தல் வேண்டும். அது இயல்வதன்று அதனால் தமக்கு எளிதில் வீடு பெறுவதற்கு உரிய வழி அடியார் நடுவில் இருத்தலே என நினைத்தார். அதனால்தான் 'அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் புரியாய்' என வேண்டுகிறார் என் கருத்து முடியும் வண்ணம் அருளைப் புரியாய்'' என வேண்டு கிறார். ''அவர் கருத்து யாது? வீடு பெற வேண்டும் என்பது, அதற்கு இறைவனே! நீ அடியார் நடுவுள் யான் இருக்கும் அருளைப் புரிதல் வேண்டும்'' என வேண்டு கிறார்.

இறைவனும் இறைவியுமாகிய நீவிர் இருவீரும் அடியேன் நடுவுள் இருப்பது உண்மை. என்றாலும் என் கருத்து இன்னும் முடிவு பெறவில்லை. அதற்குக் காரணம் இருவீரும் நடுவிருத்தல் ஒன்றையே செய்கின்றீர்கள். அதனால் இனி நீ முன்வந்து என் கருத்து முடியுமாறு செயல்புரிய வேண்டும். அச்செயலாவது யான் அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் புரிதலாம் என்கின்றார்.

இப்படி வேண்டுதலின் நோக்கம் அடியார்க்குத் தொண்டு புரிதலே விரைவில் வீடு பெறுதற்குக் காரணமாம். மக்கள் தொண்டே மகேசன் தொண்டு என்பதால் தொண்டு புரிதலின் சிறப்பு விளங்கும். எனவே அடியார் நடுவுள் இருத்தல் என்பது அடியார் நடுவில் இருந்து அவர்க்குத் தொண்டு புரிதலையே குறிக்கும் எனலாம்.

□ □ □

# 11. சச்சையன்

சச்சைய னேமிக்க தண்புனல் விண்கால் நிலநெருப்பாம்
விச்சைய னேவிட் டிடுதிகண் டாய்வெளி யாய்கரியாய்
பச்சைய னேசெய்ய மேனிய னேயொண் படவரவக்
கச்சைய னேகடந் தாய்தடந்தாள அடற்கரியே,

இது மாணிக்கவாசகரின் திருவாசக நீத்தல் விண்ணப்பம் பாடல் (31) ஆகும். இதில் உள்ள சச்சையனே என்பதற்குச் ''செச்சை (வெட்சி) மலர்போலும் சிவந்த மேனியுயுடைய சிவனே'' எனப் பொருள் கூறுவர் மகாவித்துவான் அருணை வடிவேல் முதலியார் அவர்கள். இப்பாடலுக்கு முன்பாடலில் (30) உள்ள நாலாம் அடியாகிய ''தத்துறு நீறுடன் ஆரஞ்செஞ் சாந்தணி சச்சையனே'' என்பதில் சச்சையனே என்பதற்குக் குறிப்புரை எழுதும் போது,

''செச்சை என்பது மோனைநயம் நோக்கி 'சச்சை'
எனத் திரிக்கப்பட்டது, செச்சை—வெட்சி
வெட்சிப்பூப்போலும் திருமேனியை உடையவனே
என்க.''

என்று எழுதினார். (மாணிக்கவாசக சுவாமிகள் அருளிச் செய்த திருவாசகம் திருக்கோவையார் குறிப்புரை (1956) 'தத்துறு' என்பதன் முதல் எழுத்தாகிய 'த' கரத்துக்கேற்ப ஐந்தாம் சீராகிய 'செச்சையனே' என்பதன் முதல் எழுத்து மோனையமையுமாறு 'ச' கரமாகத் திரிக்கப் பட்டது என்பது ஏற்றுக்கொள்ளப்படலாம் ஆயினும்,

மோனை நோக்கி திரித்துக்கொள்ளலாம் எனின் எச் சொல்லையும் எப்படி வேண்டுமானாலும் திரித்துக் கொள்ள லாம் எனப்பட்டு பிளவுபடும். மோனை நோக்கிச் 'செ' என்பது 'ச' எனத் திரிக்கப்பட்டதாயின் அந்தத் தொடங்கும் பாட்டிலாவது செச்சையனே எனத் தொடங் கியிருக்கலாம். அவ்வாறின்றிச் 'சச்சையனே' எனத் திரிக்கப்பட்ட வடிவிலேயே தொடங்குவானேன்? ஒருகால், அந்தாதித் தொடையாக வருதலின் திரிக்கப்பட்டது என்றால் 'நில நெருப்பாம்' எனவரும் ஐந்தாம் சீருடன் மோனையில்லையே. 'செச்சையனே' எனத் தொடங்கி யிருந்தால் 'செ'வில் உள்ள எகரத்துக்கும் 'நில நெருப் பாம்' என்பதில் உள்ள 'நி' என்பதின் இகரத்துக்கும் மோனைப் பொருத்தம் உண்டு என்னலாம். எனவே மோனைப் பொருத்தம் கருதி மாணிக்கவாசகர் 'செச்சை யனே' என்பதைச் 'சச்சையனே' எனத் திரித்துக் கூறி யிருக்கமாட்டார் என்னலாம்.

இனி மேற்பாடலில் விச்சையுடையவனே என்பார் 'விச்சையனே' என்றும், பச்சை நிறத்தையுடையவனே என்பார் 'பச்சையனே' என்றும் சச்சையையுடையவனே என்பார் 'சச்சையனே' என்றும் கூறியதுபோலச் சச்சையை யுடையவனே என்பார் 'சச்சையனே' என்றார் என்பதே பொருந்தும்.

திருமேனியின் நிறம் கருதியே சச்சையன் என்றார் மாணிக்கவாசகர் எனின், அப்பாடலிலேயே 'செய்ய மேனியனே' என மீண்டும் நிறம் கூறுதல் கூறியது கூற லாம்.

எனவே, 'சச்சையனே' என்பதற்கு வேறு பொருளை காணல் வேண்டும்.

வீரசைவர் தம் இட்டலிங்கத்தை வைத்து மூடி மார் பில் தொங்க விட்டிருக்கும் பெட்டகத்தைச் 'சச்சை'

என்று கூறுவர். அது 'செச்சை' எனவும் கூறப்படும். அச் சச்சையில் உள்ள இட்டலிங்கப் பெருமானே 'சச்சையன்' எனக் கூறப் பெற்றான், ஊரில் இருப்பவனை ஊரன் என்பதுபோல சச்சையில் இருக்கும் இறைவனைச் சச்சையன் என்று கூறினார் மாணிக்கவாசகர்.

எனவே மாணிக்கவாசகர் வீரசைவர் என்பதற்கு இச் சொல் (சச்சையன்) ஆட்சியும் சான்றுபகரும்

□ □ □

# 12. தடக்கையின் நெல்லிக்கனி

சிவபிரான் திருப்பெருந்துறையைச் சார்ந்த கோகழி என்னுமிடத்தில் அடியார் பலர்சூழக் குருமணியாய் எழுந்தருளி இருந்து, அன்பர் பலர்சூழ வந்த மாணிக்கவாசகருக்கு உபதேசம் செய்து, தன் உருக்கரந்தருளினார். அப்போது குருமணியுடன் வந்த அடியார்கள் அவருடன் ஒன்றி மறைந்தனர். குருமணியுடன் ஒன்ற இயலாதவர் சிலர் எரியிற் பாய்ந்தனர்; சிலர் மயங்கி வீழ்ந்து புரண்டனர்; அரற்றினர், ஏங்கினர். இப்படிப் பலரும் ஆக, மாணிக்கவாசகரை மட்டும் உடன்வர இசையாமல், 'நீ தில்லைக்கு வருக; அதனால் இப்போது உடன் வராமல் இங்கே இருக்க எனப் பணித்துத் தில்லை சென்று புகுந்தனர்.

மேற்கூறிய நிகழ்ச்சியை மணிவாசகரே கீர்த்தித் திருவகவலில் (126—141) கூறியுள்ளார். மேலும் அவர், சிவபிரானாகிய குருமணி, முப்புரம் எரித்த காலையில் அவ் வெரியில் யாவரையும் ஒடுக்கியதுபோல என்முன்னே அருட்சோதியில் அடியார் பலருள் ஒருவரும் உடம்புடன் வாழாதபடி ஒடுக்கியபோது, அவர்கட்கெல்லாம் விழுங்கப் பட்ட நெல்லிக் கனிபோல ஆனான்; எனக்கோ 'தடக்கையின் நெல்லிக்கனி' ஆனான் என்றார். ''அடியவரெல்லாம் இறைவனை விழுங்கியவாறு பேரின்பம் முற்றும் எய்தினர்; யானோ இறைவனை, உள்ளங்கையில் உள்ள நெல்லிக்கனி போலப் பார்த்து இன்புறுமாறு ஆனேன்'' என்றார். இதனை,

''ஏற்றார் மூதூர் எழில்நகை யெரியின்
வீழ்வித் தாங்கு அன்று
அருட்பெருந் தீயின் அடியோம் அடிக்குழல்
ஒருத்தரும் வழாமை ஒடுக்கினன்;
தடக்கையின் நெல்லிக் கனியெனக் காயினன்!!

எனத் திருவண்டப் பகுதியில் (14—18) கூறினார். இதில் ''தடக்கையின் நெல்லிக்கனியெனக் காயினன்'' என்றது சிந்திக்கத் தக்கது.

ஒரு பொருள் வெளிப்படையாகத் தெரியும் என்பதற்கும் ஒரு பொருள் உறுதி பயப்பதில் தவறாது என்பதற்கும் முன்னோர் சில சொற்றொடர்களைக் கையாண்டனர்.

சினத்தைப் பொருள் என்று கொண்டவன் கெடுவது எப்படி என்றால், நிலத்தைத் தன் கையால் ஓங்கி அறைபவனின் கை அந்நிலத்தில் உறுதல் தப்பாதது போல் ஆம் என்பர் திருவள்ளுவர்.

சினத்தைப் பொருளென்று கொண்டவன்கேடு
நிலத்தறைந்தான் கைபிழையா தற்று
(திருக்குறள் 307)

என்றார் அவர். நிலத்தறைந்தான்கை நிலத்தில் உறுதல் தவறாமை யாவர்க்கும் அறிய வரும் வெளிப்படையான நிகழ்ச்சி. அதுபோலவே சினத்தை நல்லகுணம் என்று கொண்டவன் கெடுவதும் தவறாது என்பது வெளிப்படையாம்.

ஒருகால் அதியமானிடம் ஔவையார் சென்றபோது. அவன் உடனே பரிசில் கொடுத்தனுப்பாமல் காலம் நீட்டினான். அதனை உணர்ந்த ஔவையார், 'அவன் காலம் நீட்டினாலும் அவன் பரிசில் தருவது தப்பாது' என்று கூற உற்றவா, யானையின் வாயில் வைத்த கவளம் அதன்

வாயில் புகுதல் தப்பாதவாறு போல என ஓர் உவமம் கூறினார். ''யானை தன்கோட்டிடை வைத்த கவளம் போல'' (புறம் 101) என்பது அவர் உவமை, இதுவும் தவறாமைக்குக் கூறப்பட்டது.

அவ்விரண்டும் போல 'உள்ளங்கை நெல்லிக்கனி' என்பதும் உறுதிக்கும் வெளிப் படைக்கும் கையாளப்படுவது ஒன்றாம்.

தன் அரசனின் ஆட்சிச் சிறப்பைக் கூறவந்த ஒரு வீரன், ''தேன் விளங்கும் மாலையுடைய வேந்தனின் குடைநிழலில் தங்கியிருந்து வாட் போரில் பகைவரின் வேலால் உயிர்விடும்படியான வாழ்க்கையின் பயன், உள்ளங்கை நெல்லிக்கனிபோல வெளிப்படையாதலின் தவறாது சேரும்'' என்றான்.

அங்கையுள் நெல்லி யதன்பயன் ஆதலால்
கொங்கலர் தாரான் குடை நிழற்கீழ்த்—தங்கிச்
செயிர்வழங்கும் வாளமருட் சென்று அடையார்
வேல்வாய்
உயிர் வழங்கும் வாழ்க்கை யுறும்.
(புறப்பொருள் வெண்பாமாலை-34)

என்பது வீரன் கூற்றாக வந்த பாடல். இதுவும் 'வெளிப் படையில் தவறாது வந்து சேரும்' என்பதையே கூறுகிறது,

மணிவாசகரும் இறைவன் தமக்கு வெளிப்படையாக இருந்து அருள் புரிகிறான் என்பதைக் கூறவந்தவர், 'தடக்கையின் நெல்லிக்கனி எனக்கு ஆயினன்' என்றார்.

வெளிப்படையான அருள் ஒன்றற்காகத்தான் மணி வாசகர் அவ்வுவமையைக் கூறினாரா? வேறு காரணமும் உண்டா?

உள்ளங்கையில் பிறகனிகளுள் ஒன்றாகக் கூறாமல் நெல்லிக்கனியைக் கூறுதன் காரணம் யாது?

பிறகனிகள் வெளிப்புறத்தை மட்டும் காட்டுவன உட்புறத்தில் இருப்பதைக் காட்டுவதில்லை. ஆனால் நெல்லிக்கனி மட்டும் தன் வெளிப்புறத்தைக் காட்டுவதோடு உட்புறத்தில் உள்ள கொட்டை, நார் முதலியவற்றையும் காட்டும். உள்ளங்கையில் வைத்து அவற்றைப் பார்க்கலாம். எனவே, 'உள்ளங்கை நெல்லிக்கனி' என்னும் வழக்கானது, ஒரு நிகழ்ச்சியின் பயன் வெளிப்படையாகவும் தவறாமலும் வாய்ப்பதற்குக் கூறப்படுவது என்பது மட்டுமன்றி, அதன் உள்ளே உறையும் கருத்தையறிதற்காகவும் கூறப்படுவதாம் எனவுணர்தல் வேண்டும்.

மாணிக்க வாசகருக்கு இறைவன் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் ஆயினான் என்றால், மற்றையடியவரை அருட்பெருஞ்சோதியில் ஒடுக்கியமை போலத் தம்மையும் தன் அருட்பெருஞ்சோதியில் ஒடுக்கி ஆள்வது உறுதி என்பதைக் கூறினார் எனக் கருதுதல் வேண்டும்.

அத்துடன் தமது உள்ளங்கையில் நெல்லிக்கனி போல இறைவன் சிவலிங்க வடிவாக—இட்டலிங்க வடிவாக எழுந்தருளினான் எனவும் கூறினார் எனக் கொள்ளுதல் வேண்டும்.

உள்ளங்கையில் நெல்லிக்கனி வைத்து அதன் புறத்தோற்றமும் உள்தோற்றமும் எளிதில் அறிதல் போலத் தம் உள்ளங்கையில் இட்டலிங்கப் பெருமானை வைத்துப் புறவுலக உண்மையும் இறையருட் பெருமையும் இட்டலிங்கப் பெருமானின் உள்தத்துவமும் தம்மால் அறிய முடியுமாறு இறைவன் தம்கையில் அமர்ந்தான் என்பதையும் கூறினார் எனவும் உரைலாம்.

'உள்ளங்கை நெல்லிக்கனி' என்பதை வீரசைவனின் கையில் உள்ள இட்டலிங்கத்துக்கு உவமை கூறுவர் சிவப்பிரகாசர்.

அங்கையில் நெல்லியென வந்துஎன் அங்கையமர்ந்த இளம்
திங்களம் கண்ணி நினை

(நிரஞ்சன மாலை 1)

என்பது அவர் வாக்கு.

அங்கையின் நெல்லிக் கனி என்ற உவமையினாலே இறைவன் வீரசைவனுடைய கையில் இலிங்கமாக வீற்றிருக்கிறான் என்பதே பொருள். அகம் கையில் வீற்றிருப்பது இலிங்கமே என்ற முடிபுக்கு அரணாக நிரஞ்சனமாலையில் அமைந்துள்ள ''அங்கையில் நெல்லி எனவந்து'' என்னும் பாட்டைக் கொள்ளலாம் என டாக்டர் து.கார்த்திகேயன், பாசவதைப்பரணி ஓர் ஆய்வு என்னும் தமது முனைவர் பட்ட ஆய்வேட்டில் (பக்கம்-346/1989) கூறியதும் இங்கு எண்ணுதற்குரியது.

எனவே மணிவாசகர் தம் குருமணி தமக்குக் கையில் எழுந்தருளுவித்த இட்டலிங்கப் பெருமானையே 'தடக்கையில் நெல்லிக்கனியெனக் காயினன்' என்றார் என்னலாம்.

□ □ □

# 13. "உங்கையிற்பிள்ளை உனக்கே அடைக்கலம்"

உன்கையிற் பிள்ளை உனக்கே அடைக்கலம் - இது ஒரு பழமொழி. 'உன் கையில் ஒப்படைக்கப்பட்ட குழந்தை உனக்கு அடைக்கலப் பொருளாகும்; போற்றிக் காப்பாயாக' என்பது இதன் பொருள்.

திருமணம் முடிந்ததும் மணமகளின் பெற்றோர் மணமகனிடம், 'எம்மகளை உனக்குத் தந்தோம்; கண் கலங்காமல் காப்பாயாக' எனக்கூறுவதுண்டு. ஓம்படை என்பர் இதை.

காதலர் இருவரைப் பெற்றோர் அறியாதபடி வேற்றூருக்கு அனுப்பி வைக்கும் தோழியானவள் காதலியைக் காதலனிடம் ஒப்படைத்தவளாய் "இவளை முதுமைக் காலத்தும் கைவிடாது காப்பாயாக" என ஓம்படை கூறுவாள் என்னும் தொல்காப்பியம் (களவியல் 24)

இப்பழமொழியை மாணிக்க வாசகர் புதுப்பித்துக் கூறியுள்ளார். திருவண்ணாமலைக்குத் தாம் சென்றிருந்த போது, மார்கழி மாத விடியலில், பெண்கள் ஒருவரையொருவர் துயில் எழுப்பி, நீராடி, இறைவனை வணங்கி வருவது கண்ட மாணிக்கவாசகர், அந்நிகழ்ச்சியை வைத்து இறைவன் மீது திருவெம்பாவை என்னும் தலைப்பில் இருபது பாடல்கள் பாடினார். அவற்றுள் ஒன்றில்

''உங்கையிற் பிள்ளை உனக்கே அடைக்கலம் என்னும்
பழ மொழியினைப் புதுப்பிக்கும் அச்சத்தோடு,
எங்கள் பெருமானே! உனக்கு ஒன்று சொல்லிக்
கொள்வோம். எம் கொங்கை நின் அன்பர்
தோளையே சேர்தல் வேண்டும், எங்கை உனக்கே
பணி செய்தல் வேண்டும்; எம் கண்கள்
நின்னையே காணுதல் வேண்டும்; இவ்வரமே
எங்களுக்கு நீ அளிப்பாயானால் சூரியன் எங்கு
உதித்தால் எமக்கு என்ன என்று
கவலையின்றியிருப்போம்''
(திருவெம்பாவை 19)

எனப்பாடியுள்ளார்.

அடைக்கலமாகக் கொடுக்கப்பட்ட பொருளை அடைக்கலம் பெற்றவன் போற்றிக் காத்தல் வேண்டும். அந்நிலையில் யாங்கள் அடைக்கலப் பொருள்கள்; எங்களைக் காப்பது, இறைவனே! நின்கடன்; அதனால் யாங்கள் நின்னிடத்து வேண்டுவது ஒன்றுண்டு என்று கூறி மகளிர் முன் கூறியதைக் கூறினர்.

மகளிர் கூற்றில் ஒரு மாற்றம் காணப்படுகின்றது. ''உங்கையிற் பிள்ளை உனக்கே அடைக்கலம் என்னும் பழஞ்சொற்படி எங்கள் பெருமானே உனக்கொன்று உரைப்போம் என்று கூறுவதே முறை. அதைவிடுத்து ''அப்பழம் சொல்லைப் புதுப்பிக்கும் அச்சத்தோடு உரைப்போம்'' என்றது ஒரு மாற்றம் ஆகும்.

புதுப்பித்தல் என்றால் இருப்பதை இருக்கும் நிலையினின்றும் மாற்றியமைத்தலாம். அப்பழமொழியினை புதுப்பித்தல் என்றால் அதன் பொருளை மாற்றுதலாம். பொருளை இருந்தபடிக் கூறின் அஞ்ச வேண்டுவதில்லை. மாற்றுவதால்தான் அஞ்சுவதாக மகளிர் கூறினர். மாற்றியது எப்படி?

பழமொழியின்படி அடைக்கலப் பொருள் மகளிர்' அடைக்கலம் கொண்டவன் இறைவன். காத்தற் கடமை இறைவனுடையது. இதையே மாறாக அவர்கள், 'அடைக் கலப் பொருள் இறைவன்; இறைவனைப் போற்றிக் காப்பது தங்கள் கடமை' எனக் கருதினர்.

அப்படியானால் இறைவனைக் காப்பது தங்கள் கடமையாக இருக்கும் போது தங்களைக் காக்க வேண்டும் என்று அவர்கள் வேண்டுவது மாறுபட்டதாகும். காக்க வேண்டிய தாங்களே தம்மைக் காக்க வேண்டுவது பழமொழியின் பொருளையே புதுப்பிப்பது (மாற்றுவது) போல உள்ளது. அதனால் அச்சத்தோடு வேண்டினார்கள். புதுப்பிக்கக் காரணம் யாது?

மகளிர் கூறியதாகப் பாடல் அமைந்திருந்தாலும் மாணிக்க வாசகரே தம்மை மகளிர் நிலையில் வைத்துக் கூறியதாகக் கொள்ளுதல் வேண்டும்.

சிவபிரான், திருப்பெருந்துறைக் கோகழியில் குருமணி யாக எழுந்தருளி மாணிக்கவாசகருக்கு உபதேசம் செய்த போது, திருநீறணிவித்து அவர் கையில் இட்டலிங்கப் பெருமானை எழுந்தருளச் செய்து 'இப்பெருமானைப் போற்றிப் பூசித்து வருக' எனக் கூறியருளினார். குருமணி யால் இட்டலிங்கப் பெருமான் மாணிக்கவாசகர் கையில் அடைக்கலப் பொருளாகத் தரப்பட்டான். அப்பெரு மானைப் போற்றி பூசித்து அவற்கு வேண்டுவனவற்றைச் செய்தல் மாணிக்கவாசகர் கடமை.

இனி மாணிக்கவாசகரைத் திருவண்ணாமலை மகளி ராகக் கொண்டு பார்க்கும்போது, மகளிரின் அடைக்கலப் பொருளாகிய இட்டலிங்கப் பெருமானைப் போற்றுதல் அவர்கள் கடமையாகும். அவர்கள் அதற்கு மாறாக இறைவனிடம் தாங்கள் அவன் அடைக்கலப் பொருள் போலவும் அவனே தங்களைக் காக்கக் கடமைப்பட்டவன்

போலவும் எண்ணி வரம் வேண்டுகின்றார்கள். இதுவே பழமொழியைப் புதுக்கியதாகும். அதனாலே அஞ்சியதாகக் கூறினார்கள். அவர்கள் கூற்றாகவுள்ள அப்பாடல் இது:-

உங்கையிற் பிள்ளை உனக்கே அடைக்கலம் என்று
அங்கப் பழஞ்சொல் புதுக்கும்எம் அச்சத்தால்
எங்கள் பெருமான் உனக்கொன் றுரைப்போம்கேள்
எங்கொங்கை நின்னன்பர் அல்லார்தோள் சேரற்க
எங்கை யுனக்கல்லாது எப்பணியும் செய்யற்க
கங்குல்பகல் எங்கண் மற்றொன்றும் காணற்க
இங்குஇப் பரிசே எமக்குஎங்கோன் நல்குதியேல்
எங்கு எழில்என் ஞாயிறு எமக்கு ஏல்ஓர் எம்பாவாய்

எனவே உங்கையிற் பிள்ளை உனக்கேயடைக்கலம் என்னும் பழமொழியின் பொருளை அதாவது அடைக்கலப் பொருளாகிய சிவபிரானை, அடைக்கலம் பெற்ற மகளிர் தாம் போற்றிக் காக்க வேண்டும் என்பதை மாற்றி அடைக்கலப் பொருளாகிய இறைவனிடம் தங்களைக் காக்க வேண்டும் என வேண்டுவது மேலே கூறிய பழமொழியைப் புதுக்கியதாகும்.

❑ ❑ ❑

# 14. கண்ணப்பன் ஒப்பதோர் அன்பு

கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்
என்னப்பன் என்னொப்பில் என்னையு
மாட் கொண்டருளி
வண்ணப் பணித்தென்னை வாவென்ற
வான் கருணைச்
சுண்ணப்பொன் னீற்றற்கே சென்றூ தாய் கோத்தும்பீ
(திருக்கோத்தும்பீ. 4)

என்பது மாணிக்கவாசகர் பாடல். அதில், கண்ணப்பன் சிவபிரானிடம் வைத்த அன்பு போன்ற அன்பு தம்மிடம் இல்லாதிருக்கவும் சிவபிரான் தம்மை ஆட்கொண்டு தில்லைக்கு வருக எனக் கூறியருளிய திறத்தை வியந்துள்ளார்.

மாணிக்கவாசகர் தாமறிந்த சிவனடியார்களுள் கண்ணப்ப நாயனாரிடம் மிக ஈடுபாடு கொண்டவர். நூல் விதிப்படி இறைவனைப் பூசை செய்யாமல் பார்த்தால் அருவருக்கத் தக்க நிலையில் பூசை செய்தவர் கண்ணப்பர். இறைவனை நீராடித் தம் வாயில் நீர் கொண்டு வந்ததும், செருப்புக் காலுடன் வந்ததும், பன்றியின் ஊனை உணவாகப் படைத்ததுமாகிய செயல்கள் அருவருக்கத் தக்கன. இருந்தாலும் சிவபிரான் ஏற்றுக்கொண்டார்.

பொருட்பற்றிச் செய்கின்ற பூசனைகள் போல் விளங்கச்
செருப்புற்ற சீரடிவாய்க்கலசம் ஊனமுதம்
விருப்புற்று வேடனார் சேடறிடமெய் குளிர்ந்தங்கு
அருட்பெற்று நின்றவா தோணோக்கம் ஆடாமோ.
(திருத்தோணக்கம்-3.)

என்றார் மாணிக்கவாசகர். ஆகம நூலில் கூறப்படும் பூசை விதிமுறையைப் பின்பற்றிச் செய்யப்படும் பூசை போல் விளங்கியதாம் கண்ணப்பன் செய்த பூசை. அதனால்தான் வியந்தாரோ?

அன்பு காரணமாக அருவருக்கத்தக்க இப்பூசையினும் பகைத்து வெறுக்கத்தக்க நிலையில் கல்லால் சிவபிரானை எறிந்து அருள் பெற்ற சாக்கிய நாயனாரின் அன்பு மேம்பட்டதன்றோ? வாளால் மகவறிந்து ஊட்டிய சிறுத்தொண்ட நாயனார் செயலும், மாது சொன்ன சூளால் இளமை துறந்த திருநீலகண்ட நாயனார் செயலும் செயற்கரிய செயல்களல்லவோ? கண்ணப்ப நாயனார் செயலை மட்டில் வியத்தற்குக் காரணம் என்னை? கண்ணப்பன் ஒப்பதோர் அன்பு தம்மிடம் இல்லையெனக் கூறுவானேன்? இறைவனாலேயே அம்மையே என அழைக்கப்பட்ட காரைக்காலம்மையார் அன்பு எவ்வளவு சிறந்தது? தன் கண்ணைத் தோண்டியது சிறந்ததாயின், தன் கழுத்தை அரிவாளால் அரிந்த அரிவாட்டாயர் அன்பும் சிறந்ததன்றோ? கண்ணப்ப நாயனார் அன்பு மட்டும் சிறந்ததாகக் கருதக் காரணம் என்ன? அந்நாயன்மார்கள் மாணிக்கவாசகருக்குப் பிற்பட்ட காலத்தவர்களாகலாம் என்பது சிறவாது.

சிவபிரான் செயல் தன்னை அடியவர்க்குத் தருவதும் அடியவரைத்தான் கொள்வதும் ஆகும். ''தந்தது உன் தன்னைக் கொண்டது என் தன்னை'' (கோயில் திருப்பதிகம்-10) என்று மணிவாசகர் கூறியுள்ளார். உன்னைத் தந்தனை (திருச்சதகம்-30) என்று பிறிதோரிடத்தும் கூறியுள்ளார் இறைவன் அடியவர்க்குத் தன்னைத் தருதல் என்பது அடியவர் உடம்பில்—உயிரில் தான் கலந்து தன்னையே நினையுமாறு அருள் செய்தல். அடியவரைக் கொள்ளுதல் என்பது உலகில் உலவும்போது தன் அருள்வழி நடக்கச் செய்தலும் முடிவில் வீடு பேறடையச் செய்தலும் ஆம். அந்நிலையில் கண்ணப்ப நாயனாருக்குத் தன்னிடம்

அன்பு பெருகச் செய்தது தன்னைத் தந்ததாகும்; முடிவில் தன்னிடம் சேர்த்து இன்புறச் செய்ததும் தன்னைத்தந்ததாகும். நாயனாரின் பூசையை ஏற்றுக்கொண்டதும் அவர் அப்பிய கண்ணை ஏற்றுக்கொண்டதும் அடியவரை ஏற்றுக்கொண்டதாகும். இத்தகைய தருதலும் கொள்ளுதலும் எல்லா அடியவரிடத்தும் நிகழ்வனவே என்றாலும் கண்ணப்ப நாயனாரிடத்து அவை ஒப்புயர்வற்ற சிறப்புடையனவாகும். நாயனார் அளித்த பூசையினும் அளித்த கண்ணே மிகச்சிறப்புடையதாகும்.

அடியவர் தருவனவற்றை இறைவன் ஏற்றுக்கொள்ளுதல் என்பது கருதுகோளே—பாவனையேயன்றி வேறில்லை. கண்ணப்ப நாயனார் படைத்த ஊன் அமுதும் பாவனையால் ஏற்றுக்கொள்ளப்பட்டதே. ஆனால் நாயனார் தம் கண்ணைத் தோண்டி இறைவனின் புண்பட்ட கண்ணில் பதித்தது பாவனையில்லை; உண்மை. ''ஊனுக்கு ஊன்'' என்னும் விதிக்கு ஏற்ற வகையில் கண்ணுக்குக் கண்ணையே அப்பிய செயலை—அதாவது நாயனாரது ஊனக் கண்ணை இறைவன் தன் கண்ணிடத்துப் பதித்துக்கொண்டதை எண்ணும்போது, இறைவன் ஊனக் கண்ணைக் கொண்டருளும் வண்ணம் நாயனாரது அன்பிருந்தது என்பது புலப்படும். அதனால் தான் மணிவாசகர் அடியவர்களுள் கண்ணப்ப நாயனார் அன்பைச் சிறந்ததாக வியந்து அத்தகைய அன்பு தம்மிடம் இல்லை எனக் கூறினார்.

மேலும் சிவபிரான் வடிவம் சிலை வடிவமானாலும் கண்ணப்ப நாயனாரின் ஊனக்கண்ணை அப்பிக்கொள்ளும் அளவில் தன் வடிவையும் ஊன் வடிவாகக் காட்டியதும் அவர் அன்பை வியத்தற்குக் காரணம் என்னலாம். கால் மடித்து அமரும் மனித உடல் இலிங்கத் தோற்றம் உடையது ஆகும். கண்ணப்பர் கண்ட சிவலிங்கம், அவர்க்குச் சிலைவடிவாகத் தோன்றாமல் உடல் மனித

வடிவாகவே தோன்றிற்று. அவ்வாறு இறைவன் தன்னைச் சிலை வடிவு நீக்கி மனித ஊன்வடிவு கொண்டு காட்டினான். கண்ணுக்குக் கண் அப்புவதற்கு அவ்வடிவம் எளிதாயிற்று. ஊனக்கண்ணை ஏற்க ஊன் வடிவு கொள்ளுமாறு கண்ணப்பர் அன்பு இருந்ததாதலின் மணிவாசகர் அவர் அன்பை வியந்தார் என்னலாம்.

மேலும் அங்க இலிங்க ஐக்கியம் கூறுவது வீரசைவம் மனித உடம்பே (உயிரே) அங்கமாகவும் இலிங்கமாகவும் ஐக்கியப்படுவது. அங்கமே இலிங்கத்துடன் சடுத்தல அமைப்பில் ஐக்கியப்படுவது. அதனைப் புறத்தோற்ற வகையில் கண்ணப்பரின் கண் அப்பிய செயல் காட்டுகின்றது. நாயனாரின் கண்ணாகிய அங்கம் இலிங்கத்தில் அப்புவதன் மூலம் ஐக்கியப்படுத்தப் பட்டதை அறிவிப்பதே கண்ணை அப்பிய செயல். எனவே வீரசைவ சமயக் கோட்பாட்டுக்கு ஏற்ப அமைதலின் அச்செயலுக்குக் காரணமான அன்பை வியந்து அவ்வன்பு தமக்கு இல்லை என வியந்தார் மாணிக்கவாசகர் என்னலாம்.

எனவே, இறைவன் கண்ணப்பரின் ஊன் உடம்புக்கு ஏற்பத் தன்னையும் ஊன் உடம்பாகக் காட்டியதும்' ஊனக்கண்ணைத் தான் ஏற்றதன் மூலம் அங்க இலிங்க ஐக்கியத்தைப் புலப்படுத்தியதும் ஆகிய செயல்களாலேயே அவற்றுக்குக் காரணமான அன்பினை வியந்தார் மாணிக்கவாசகர் என்னலாம்.

குறிப்பு : தமிழ் நாட்டில் சடுத்தலம் அட்டாவரணம் போலும் வீரசைவ சமய தத்துவக்கோட்பாடு பரவுவதற்கு முற்பட்ட காலத்தவர் மாணிக்கவாசகர் என்றாலும் அக்கோட்பாட்டின் குறிப்புகள் அவர் பாடல்களில் காணப்படுதலை மறுத்தற்கு இல்லை!

□ □ □

# 15. மாணிக்கவாசகரின் சிவபூசைப் பற்று!

---

மாணிக்கவாசகருக்குச் சிவபூஜை செய்வாரிடத்து மிக்க மதிப்பு உண்டு. அறுபத்து மூவர் நாயன்மாருள் தம் காலத்துக்கு முற்பட்ட இருவரைத் தம்பாடலுள் போற்றிக் கூறியது கொண்டு உணரலாம்.

தம் சிவபூசையைச் சிதைத்த தந்தையாரின் கால்களைத் துண்டித்த சண்டேசர், பாதகச் செயல் செய்தாராயினும் அதன் காரணமாகவே சிவப்பேறடைந்தார் என்பதை எண்ணி வியந்து,

தீதில்லை மாணி சிவகருமம் சிதைத்தானைச்
சாதியும் வேதியன் தாதைதனைத் தாளிரண்டும்
சேதிப்ப வீசன் திருவருளால் தேவர்தொழப்
பாதகமே சோறு பற்றினவா தோணோக்கம்

(திருத்தோணோக்கம்-7)

எனப் பாடினார்.

சிவபிரான், கண்ணப்ப நாயனார் செய்த சிவபூசைக்கு அதாவது ''விருப்புற்ற சீரடி வாய்க் கலசம் ஊன் அமுதம் கொண்டு செய்த சிவபூசைக்கு விருப்புற்று அருள் செய்தார் என்பதை,

பொருட்பற்றிச் செய்கின்ற பூசனைகள் போல் விளங்கச்
செருப்புற்ற சீரடி வாய்க்கலசம் ஊனமுதம்
விருப்புற்று வேடனார் சேடறிய மெய்குளிர்ந் தங்கு
அருட்பெற்று நின்றவா தோணோக்கம் ஆடாமோ

(திருத்தோணோக்கம்-3

என்னும் பாடலிற் றறிந்து வியந்தார். கண்ணப்பரின் சிவபூசையிற் கண்ட அன்பினை வியந்தே, 'கண்ணப்பன் ஒப்பதோர் அன்பு உலகில் இல்லை' என்றார் (திருக்கோத் தும்பி-4) திருமால் ஆயிரம் தாமரைப் பூக்கொண்டு சிவபூசை செய்து சக்கரம் பற்றதையும் கூறியுள்ளார்.

(திருத்தோணோக்கம்-10)

தாம் செய்த பூசையையும் உவந்து தமக்குச் சிவபிரான் அருள் செய்ததை ஓரிடத்து,

''பாசவே ரறுக்கும் பழம்பொருள் தன்னைப்
பற்றுமா றடிய னேற் கருளிப்
பூசனை யுகந்தென் சிந்தையுட் புகுந்து
பூங்கழல் காட்டிய பொருளே''

(பிடித்தபத்து-7)

என்றார்.

வீரசைவம், சைவம் எனப்பிரிவு தோன்றுதற்கு முற்பட்ட காலத்தவர் மாணிக்கவாசகர் ஆதலின் அவர், திருக்கோயிலின் திருவுருவ வழிபாட்டையும் வேறுபாடு காணாமல் போற்றினார்.

திருக்கோயிலில் சிவலிங்கப் பெருமானுக்கு அபிடேகம் செய்யும்போது திருநீற்று அபிடேகமும் சந்தன அபிடேகமும் சிறப்பு அபிடேகங்களாகச் செய்வர். அப்போது அக்காட்சிகள் மனத்தையீர்ப்பனவாக அமையும். அக்காட்சிகளை நேரில் கண்டுகளித்தமையால் மாணிக்க வாசகர், தம் பாடல்களில் அவற்றை அடிக்கடிச் சிறப்பித்துக் கூறினார்.

''மெய்யிலங்குவெண் ணீற்று மேனியாய்''

(திருச்சதகம்-92)

''சந்தனச் சாந்தின் சுந்தர''

(போற்றித் திருவகவல் 203)

"சத்துரு நீறுடன் ஆரச் செஞ்சாந் தணிசச் சையனே"
(நீத்தல் விண்ணப்பம்-30)

என்பன போலப் பலவிடங்களில் கூறியுள்ளார்.

திருநீற்றுக் காப்பு, சந்தனக்காப்பு அலங்காரங்களும் தனித்தனி அமைத்து அடியவர் காணச் செய்தல் இன்றும் இருந்து வருவதைக் காணலாம்.

இட்டலிங்க பூசையிலும் திருநீற்றபிடேகம் செய்து அந்நீற்றை நெற்றியில் அணிதலும், சந்தன அபிடேகம் செய்து அதனை நெற்றியில் அணிதலும், இன்றும் இட்டலிங்க பூசை செய்வாரிடத்துக் காணப்படுவனவே.

அபிடேக காலத்தில் நறுமணப் பொருள்களின் கலவைப் பொடியைப் பயன்படுத்துவர். அப்பொடியானது மஞ்சள் முதலிய நறுமணப் பொருள்களை உரலில் இட்டுக் குற்றிக் கொள்ளப்படும். மாணிக்கவாசகர் அப்பொடியைத் 'திருப்பொற் சுண்ணம்' என்றார். அச்சுண்ணம் இடிப்பதற்கு மகளிரை அழைப்பதாக அமைத்துத் 'திருப்பொற்சுண்ணம்' என்ற தலைப்பில் இருபது பாடல்கள் சிறப்பாகப் பாடியுள்ளார். (சுண்ணம் —பொடி. இது சூர்ணம் என ஆரியச் சொல்லாகியது)

திருப்பொற் சுண்ணத்தைத் திருக்கோயில் இறைவனுக்கு என இடிப்பவர் திருக்கோயிலின் ஓரிடத்திலிடிப்பதும் வீடுகளில் பூசை செய்வார் தம் வீடுகளில் இடிப்பதும் உண்டு. பொற்சுண்ணம் இடிப்பவர் மகளிர். அவர்கள் முதலில் தாம் தூயராய்த் தம் நெற்றியில் திரு நீறணிந்தவராய் சுண்ணமிடிக்கும் இடத்தை எங்கும் மெழுகித் தூய்மை செய்தல் வேண்டும். (திருப்பொற் சுண்ணம் 3) எங்கும் முத்துமாலை (பூமாலை) தொங்க விடல் வேண்டும். முளைக்குடம் (நிறைகுடம்) வைத்தல் வேண்டும் (ஷை - 1) உலக்கைகளுக்குப் பூண்களை ஒழுங்கு படுத்துதலும் உரலுக்கு மங்கல ஆடை சுற்றுதலும்

வேண்டும். (ஷை-4) உரலில் மஞ்சள் முதலிய நறுமணப் பொருள்களை இடுதல் வேண்டும். (ஷை-9)

இப்படியெல்லாம் செய்து பின்னர் நறும்புகை காட்டித் தீபமும் காட்டிக் (ஷை-1) கைகளில் உலக்கைகள் பற்றி இடித்தல் வேண்டும். இப்படி இயக்கப்பட்ட சுண்ணமே அபிடேகத்துக்கு உகந்ததாம்.

''சுண்ண அபிடேகத்துக்கு முன்னர் நெய்யபிடேகம் நிகழ்த்தப் பெறும். அப்போது முதலில் தேவர்கள் தத்தம் தரத்துக்கு ஏற்ப முன்பின்னாக வந்து 'அறுகம் புல் கொத்து' எடுத்து நெய்யில் தோய்த்து முறையாக இறைவன் முடியில் தீற்றுவர். அதன் பின்னரே மக்கள் நீற்றுவர்'' என்பது ஒரு கருத்து போலும். அதனால் மாணிக்கவாசகர் பின்வருமாறு கூறினார்.

''அறுகெடுப்பார் அயனும் அரியும்
அன்றிமற் றிந்திரனோ டமரர்
நறுமுறு தேவர் கணங்க ளெலாம்
நம்மிற்பின் பல்லது எடுக்க ஒட்டோம்''
(ஷை-5)

என்றார். ''அயன், அரி, இந்திரன் முதலிய தேவர் முறையே அறுகெடுத்து நெய்தீற்ற முன் வருவர் அவர்களை நமக்குப் பின்னால் எடுக்க விடுவோமேயன்றி முன்னாக எடுத்துத்தீற்ற விடமாட்டோம்'' என்று மானிடப் பெண் ஒருத்தி மற்றைப் பெண்களை நோக்கிக் கூறியதாக அமைந்தது அப்பகுதி.

இக்காலத்தில் மணமக்களுக்கு நலங்கிடுதல் என்னும் சடங்கில் எண்ணெய் நலங்கு என ஒன்றும் உண்டு. எண்ணெய் தேய்த்து நீராட்டுவது அந்நிகழ்ச்சி. எண்ணெய் நலங்கின் போது மணமக்களின் தாயார், தமக்கையர் மற்று முள்ள உறவினர் தத்தம் உறவு நட்புத்தரங்களுக்கேற்ப

முறையாக முன்பின்னாக வந்து அறுகம்புல் கொத்தில் எண்ணெய் தோய்த்து மணமக்களின் தலையில் இடுவது உண்டு. இதுபோல இறைவனுக்குத் தேவர் அறுகு எடுப்பதாகவும் அவர்களுக்கு முற்பட்டு நாம்எடுக்க வேண்டும் என ஒருக்கி கூறுவதாகவும் அமைந்துள்ள மேற்பாடலினால் ஒரு கருத்து புலப்படுகின்றது, அதாவது இறைவனுக்கு அபிடேகம் செய்யும்போது நெய்யபிடேகத்தில் தேவர் முறையே நெய்யிடுவதாகக் கூறும் வழக்கு மணிவாசகர் காலத்தில் இருந்திருக்க வேண்டும் என்பதாம்.

மணிவாசகர் திருப்பொற் சுண்ணம் பாடியதாலும் நெய்யபிசேகம் பற்றிக் கூறியதாலும் அபிடேகக் காட்சியில் ஈடுபட்டவர் அவர் என்பதும், சண்டீசர், கண்ணப்பர் திருமால் ஆகியோரைப் பூசனை காரணமாக வியந்தமையால் அபிடேகம் செய்பவர்பால் மிக்க மதிப்புடையவர் என்பதும் பெறப்படும்.



# 16. மாணிக்கவாசகர் வேண்டிய ஐக்கியம்

ஐ—இது ஓர் உயிர் நெட்டெழுத்து. இது தனி யெழுத்து என்றாலும் கூட்டெழுத்தாகவும் கூறப்படும். இதன் கூட்டு வடிவத்தை ''அகரம் இகரம் ஐகாரமாகும்.'' எனத் தொல்காப்பியர் கூறுவர் (நூன்மரபு) அ, இ என்பன இணைந்து ஐ என்றாகும். எனவே ஐ என்பது ஓரெழுத்தா இரண்டெழுத்தா எனின் இரண்டற்ற எழுத்து என்னலாம், தனிநெடிலாகக் கருதின் ஓரெழுத்தாம். அதையே அகர இகரங்களின் கூட்டு எனக் காணின் இரண்டெழுத்தாம். இரண்டெழுத்தாயினும் அகரமும் இகரமும் பிரிந்து ஒலிப்ப தில்லை. நெடில் நிலையில் ஓரொலியாகவே ஒலிக்கும். இவ்விரண்டெழுத்தும் ஒன்றுபட்ட நிலை ஐக்கிய நிலை எனப்படும். ஐ என்ற எழுத்தின் ஒலியமைப்பைக் கொண்டே பிரிவற்ற ஒற்றுமையை ஐக்கியம் என்றனர் போலும் முன்னோர்.

முத்தி நிலையில் பதியும் பசுவும் ஒன்றுபடும் நிலையை ஐக்கிய நிலை என்பர். அகரம் மற்றையெழுத்துக்களுக்கு முதலாவது; மற்றையெழுத்துகளில் கலந்திருப்பது. அது போல இறைவன் (பதி) உலகுக்கு முதலானவன், உலகில் கலந்திருப்பவன், அகரத்தின் ஒலியிலிருந்தே இகர ஒலி தோன்றும். இறைவனிடத்திலிருந்தே உயிர் (உலகம்) தோன்றும். அகரமும் இகரமும் தனித்தனி எழுத்துகளா தல் போல இறைவனும் உயிரும் பிரிந்து காணப்படும்.

அகரத்தோடு இகரம் சேர்ந்து—இகரம் தன்னொடு சேர் தற்கு இடம் கொடுத்து 'ஐ' ஆவது போல இறைவனருளால் உயிர் அவனைச் சேரும். இச்சேர்க்கையே ஐக்கிய நிலை.

ஐக்கிய நிலை மூவகைப்படும்.

(1) சிவனடியாரொடு ஐக்கியமானான் என்றால் அடியார் கூட்டத்துள் ஒருவனானான் என்பதும் என்றாலும் அவரிலிருந்து பிரித்துக் காணமுடியாதவனானான் என்பதும் அவருடனிருந்து அவர்போலத் தொழில் புரிந்து என்பதும் பெறப்படும்.

(2) சிவநெறியில் ஐக்கியமானான் என்றால் தனக்கென ஒரு தனிநெறியின்றிச் சிவனையடைதற்குரிய சரியை கிரியை யோகம் ஞானம் என்ற நெறிகளில் தன்னை யீடுபடுத்திக் கொண்டு அவற்றினின்றும் பிரியாதவனாக—பிரிக்க இயலாதவனாக ஒன்றிப் போனான் என்பது பெறப்படும்.

(3) சிவத்தோடு ஐக்கியமானான் என்றால் தான் வேறு சிவம் வேறு என்ற எண்ணம் இல்லாமல் செய்யும் செயலெல்லாம் சிவன் செயலாகவே அமைய, காண்பார்க்கும் இவன் சிவனே என எண்ணி வழிபடும் தோற்றமுடையவனாய் உள்ளான் என்பது பெறப்படும்.

இம்மூவகை ஐக்கிய நிலைகளையும் இறைவன்பால் மாணிக்கவாசகர் வேண்டுகிறார்.

உடையாள் உன்றன் நடுவிருக்கும்
உடையாள் நடுவுள் நீயிருத்தி
அடியேன் நடுவுள் இருவீரும்
இருப்பதானால் அடியேன்உன்

அடியார் நடுவுள் இருக்கும் அரு
ளைப்புரி யாய்பொன் னம்பலத்தெம்
முடியா முதலே என்கருத்து
முடியும் வண்ணம் முன்னின்றே

(கோயில் மூத்த திருப்பதிகம்)

இப்பாடலில் அவர் 'அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் புரியாய்' என வேண்டுவது அடியாரொடு ஐக்கியமாதலைக் குறிக்கும்.

ஆமாறுன் திருவடிக்கே அகம்குழையேன் அன்புருகேன்
பூமாலை புனைந்தேத்தேன் புகழ்ந்துரையேன் புத்தேளிர்
கோமான்நின் திருக்கோயில் தூகேன் மெழுகேன் கூத்தாடேன்
சாமாறே விரைகின்றேன் சதுராலே சார்வானே.

(திருச்சதகம்—18)

எனச் சிவநெறிக்காம் செயல்களைத் தாம் செய்யவில்லை என்று கூறுவதன் மூலமாக அவற்றையருள வேண்டுவது சிவநெறி ஐக்கியம் வேண்டுதலைக் குறிக்கும்.

மேற்கூறிய இரண்டும் சிவனோடு ஐக்கியமாதலுக்குத் துணை செய்வனவாம். சிவ ஐக்கியம் ஆகா. சிவனோடைக்கியம் ஆதலைப் புணர்ச்சிப்பத்து என்னும் பத்துப் பாடல்களில் வேண்டுகிறார்.

புணர்ச்சிப் பத்து எனும் பகுதியில் ஒன்பது பாடல்களில் இறைவனோடு ஐக்கியமாகி அவனை நினைதலும் அவன்பால் உருகுதலும் மலர் தூவி வழிபடுதலும் பிறவுமாகத் தாம் இன்புறுதல் வேண்டும் என வேண்டுகிறார். இந்நிலை முத்திநிலையில் தானும் இறைவனும் என இரண்டு பொருள் எனும் உணர்வு கொள்ளும் நிலையாகும். சிவனோடைக்கியம் எனும் நிலையை,

அல்லிக் கமலத் தயனுமாலும் அல்லாதவரும்
அமரர்கோனும்
சொல்லிப் பரவும் நாமத்தானைச் சொல்லும்
பொருளும் சிறந்தசுடரை
நெல்லிக் கனியைத் தேனைப்பாலை நிறையின் னமுதை
அமுதின் சுவையைப்
புல்லிப் புணர்வ தென்று கொல்லோ என்
பொல் லாம ணியைப்பு ணர்ந்தே.

என்னும் நான்காம் பாடலில்தான் தெளிவாகக் கூறினார்.

'பொல்லா மணியைப் புணர்ந்து (அடைந்து) புல்லிப் புணர்வது' என்பதே சிவனோடைக்கியத்தை விளக்குவதாம்.

மனையாள் ஒருத்தி தன் கணவனை அவன் வேறு தான் வேறு என்று எண்ணாமல் 'தானே அவன் அவனே தான்' என்ற நிலையில் தழுவிப் புணர்வதே அவனோடு அவள் ஐக்கியமாதலாகும். அந்த வகையில் இறைவனோடு தாமும் இறைவன் வேறு தாம் வேறு என்ற உணர்வின்றித் தாமே சிவம் என்ற உணர்வில் தழுவிக் கூடுதலாகிய ஐக்கிய நிலையையே மாணிக்கவாசகர் அப்பாடல் மூலம் வேண்டினார்.

சிவனோடைக்கிய நிலையில் ஏற்படும் இன்பத்தை நான்கு பொருள் மூலம் விளக்கினார்.

1. நெல்லிக்கனி : நெல்லிக்கனியைத் தின்றவன் நீரு குடித்தால் இன்சுவை பெறுவான். கனியின் சுவையை நீரால் பெற முடியும். அதுபோல இறைவனை அடைந்தாலும் அவனருள்தான் இன்பத்தைச் சேர்க்கும்.

2. தேன் : தேனை உண்டால் இனிய சுவை பெறலாம். உண்டுமுடியின் நாக்கில் சிறிதளவு புளிப்புத் தோன்றும். சிவனோடைக்கியத்தால் பெறும் இன்பமும் அவ்வாறாமே எனின் மீண்டும் உயிர் பிறவி எடுக்க நேரின் அவ்வாறாம்.

3. பால்: பால் சுவையுடையது என்றாலும் அதில் நீரும் உண்டு. அந்நிலையில் ஐயக்கியப்பட்டபோது இறைவன்தான் என்ற வேறுபாடு தோன்றுமோ எனும் ஐயம் எழும்.

4. அமுது: மேற்கூறிய மூன்றிலும் ஒவ்வோர் குறை யிருத்தலின் அவற்றினும் மேலான அமுதத்தை இறுதியில் கூறினார். அமுதம் மேற்கூறிய மூன்று குறைகளும் இல்லாதது. அதனால் அதை 'நிறையின் அமுது' என்றார்.

அந்த அமுதின் சுவை போன்றவன் இறைவன். அவனை அடைந்து ஒன்றுவதே சிவ ஐக்கியமாகும். அதையே வேண்டினார் மாணிக்கவாசகர்.

வீரசைவர் ஐக்கிய நிலை என்று கூறுவதையே மற்றை யோர் அத்துவித நிலை என்றனர்.



## 17. "தந்ததுன் தன்னைக் கொண்டது என்தன்னை"

தந்ததுன் தன்னைக் கொண்டதென் தன்னைச்
சங்கரா ஆர்கொலோ சதுரர்
அந்தமொன்றில்லா ஆனந்தம் பெற்றேன்
யாதுநீ பெற்றதொன் றென்பால்
சிந்தையே கோயிலாக் கொண்டஎம் பெருமான்
திருப்பெருந் துறையுறை சிவனே
எந்தையே ஈசா வுடலிடங் கொண்டாய்
யான்இலன் இதற்கோர்கைம் மாறே.

இது மணிவாசகர் பாடல். இதில் சங்கரனை விளித்து, "நீ உன்னை எனக்குத் தந்த செயலும் என்னை நீ கொண்ட செயலும் ஆகியவற்றால் சதுரப்பாடு உடையவர் யார்? என்று வினவி, அதற்கு விடையாக, "அந்தம ஒன்றில்லா ஆனந்தம் பெற்றேன்; யாது நீ பெற்றது ஒன்று என்பால்? என வினாவையே விடுத்தார், விடையாகிய வினாவின் மூலம் தாமே சதுரப்பாடுடையவர் எனத் தெரிவித்தார்.

சாதுர்யம் உடையவர் சதுரர்; சாதுர்யம்-கெட்டிக் காரத்தனம்—அதாவது ஒரு காரியத்தை எளிதில் பயன் மிக்கதாக ஆக்கிக் கொள்வது. மணிவாசகர் இறைவனால் அந்தம் ஒன்றில்லா ஆனந்தம் பெற்றார். அதைப் பெற தற்குத் தாம் யாதோர் முயற்சியும் மேற்கொள்ளவில்லை

யாம், முயற்சியில்லாமலே முயற்சியால் வரும் பயனைப் பெற்றாராம். முயற்சி இறைவனுடையதாயிற்று. அவர் செய்த முயற்சியாவது, மணிவாசகருக்குத் தன்னைத் தந்ததோடன்றி மணிவாசகரை ஆட்கொண்டதும் ஆகும். தருவதும் கொள்வதுமாகிய இரண்டு செயல்களையுமே இறைவன் செய்தான். அவ்விரண்டு செயல்களாலும் அந்தம் ஒன்றில்லா ஆனந்தம் பெற்றார் அவர். முயற்சியை மேற்கொண்ட இறைவன் மணிவாசகரால் யாதொரு பயனும் அடையவில்லை அதனால் தாமே சதுரர் என்றார்.

பரசிவமாகிய சிவலிங்கத்தினின்றும் உயர்சதாசிவம் தோன்றும். சதாசிவமும் அவர் சத்தியும் காரணமாய் பல உயிர்கள் இறங்குபடி முறையில் தோன்றும். அப்படித் தோன்றும் உயிர்களுள் உருத்திரனும் ஒருவன். அவன் சக்திமூலம் திருமால் தோன்றுவன்; அவன் சத்திமூலம் பிரமன் தோன்றுவன்; அவன் தன் சக்தியினால் இவ்வுலகம் தோன்றும். இவ்வுலகம் முதலியன ஏறுபடிமுறையில் ஒன்றனுள் ஒன்று ஒடுங்கும். இது உலகத் தோற்ற ஒடுக்கமாம். இது பரசிவத்தின் நினைவு மாத்திரையின் நிகழ்வதாம், இதற்கிடையில் உலகில் உள்ள உயிர்கள் இறைவனை அடைதற்குரிய முயற்சிகளை அவனருளால் மேற்கொண்டு அவனை அடைதல் உண்டு. இப்படி அடையும் உயிர் அந்தம் ஒன்றில்லா ஆனந்தம் பெறும்— இது வீரசைவ சமயக் கொள்கை.

உலகத் தோற்றமும் ஒடுக்கமும் பரசிவத்தின் நினைவு மாத்திரையின் ஆகும் என்பதால் ஓர் உயிர் பரசிவத்தை அடைவதும் அதன் நினைவாலேயே ஆம் என்பதாம். அதனால்தான் மணிவாசகர் இறைவன் தன்னைத் தனக்குத்தந்ததாகக் கூறியவர், தாம் இறைவனை அடைந்த தாகக் கூறாமல் இறைவனே தம்மைக் கொண்டதாகக் கூறினார். தமக்கு அந்தம் ஒன்றில்லா ஆனந்தம் ஆக்குவதும் அவன் செயலே என்பதற்காக இறைவனை அளிக்கும்

போது சங்கரா என அளித்தார். சங்கரன் என்னும் வட சொற்கு இன்பத்தைச் செய்பவன் என்பது ஒருபொருள்.

சங்காரம் செய்பவன் சங்கரன் என்றும் கூறலாம். அப்படியாயின் தம்மிடம் உள்ள அஞ்ஞானத்தைச் சங்கரிப்பவன் என்று கூறியதாகவும் கொள்ளலாம். எனவே சங்கரா என அளித்து இறைவன் உயிர்களிடத்துள்ள அஞ்ஞானத்தை அழித்தும் பேரின்பத்தைச் செய்பவன் என்பதைச் சுட்டினார், எனக்கு நின்னைத் தந்ததன்மூலம் அஞ்ஞானத்தை அழித்தும் என்னைக் கொண்டதன்மூலம் ஆனந்தம் அளித்தும் சங்கரன் ஆனாய் என்பதை உணர்த்தவே தந்தது உன் தன்னைக் கொண்டது என்தன்னை எனக் கூறியவர் தொடர்ந்து சங்கரா என அளித்தார்.

இறைவனுக்கு நம்மை நாம் ஏற்பித்தால் அவன் தன்னை நமக்கு ஏற்கச் செய்வான். ஏற்கச் செய்தல் என்பது அருளல், அவ்வருளல் பிரசாதம் எனப்படும். இப்பிரசாதம் என்பது வீரசைவர்களால் கையாளப்படும் மரபுச் சொல் நாம் நம்மை இறைவனுக்கு அர்ப்பிக்க அதை ஏற்கும் அவன் தன்னை நமக்கு அருளுவான் என்பது சாத்திரமாயினும் நாம் நம்மை அர்ப்பிப்பதும் அவனருளாலேயேதான். அவ்வருளை அவன் தமக்கு அளித்ததையே முதலில் வைத்துத் தந்தது உன் தன்னை என்றார்.

சூரிய ஒளிபொருள்களைக் காட்டும் என்றாலும் அது நம் கண்ணில் படிந்து காட்டினால்தான் கண் பார்க்கும், இறைவன் தன்னைத் தருதல் மட்டும் செய்வானாயின் உயிர் இன்பத்தையடைந்து விடாது. இறைவன் எங்கும் நிறைந்தேயிருக்கிறான், அதனால் யாவும் இன்பம் அடைந்துவிடவில்லை அவன் உயிர்களை ஏற்றால்தான் இன்பம் அடையமுடியும். அதனால் தான் தந்தது உன் தன்னை என்றதுடன் கொண்டது என் தன்னை என்றும் கூறினார் மணிவாசகர்.

இறைவன் உறையும் இடங்களை மூன்றாகக் குறித்தார். திருப்பெருந்துறை, தம்சிந்தை, தம உடல் என்பவை அவை. திருப்பெருந்துறை புறஇடம். சிந்தையும உடலும் தமக்கு அகஇடம். சிந்தை உடம்பொடுகூடிய உயிருக்கு உரிய அகக்கருவி அதனால் சிந்தையே கோயிலாகக் கொண்டவன் என்பதும், உயிரைக் கோயிலாகக் கொண்டவன் என்பதாயிற்று. உயிர் இறைவனையடைவதற்குரிய வெளிப்படக் காணும் புறக்கருவி உடல். இறைவன் உடலிடம் கொண்டான் என்பது உடம்பில் வெளிப்படையாகக் காணுமாறு இடம கொண்டான் என்பதாம். அதாவது வீரசைவர் உடம்பில் அணியும் சிவலிங்கத்தையுணர்த்துவதாம் இம்மூன்றிடங்களைக் குறிப்பிட்டதன் நோக்கம் யாவரும் வழிபடுமாறு திருப் பெருந்துறைக் கோயிலில் தாவரலிங்கமாக இருக்கும் இறைவனைத்தம உடலில் தாங்கி இட்டலிங்க வடிவாகக் கொண்டு பூசித்து உயிரில் பிராண பாவலிங்கங்களாகத்தாம் வழிபடும் நெறியைக் குறிப்பாகும்.

மேற்பாடலின் கருத்தாவது ''திருப் பெருந்துறையில் தாவரலிங்கமாகவும் என் உடம்பில் இட்டலிங்கமாகவும் உயிரில்பிராண லிங்கமாகவும் உள்ள நின்னைப் பாவலிங்கமாகவும் கொண்டு பூசிந்து நின் திருவருட் பிரசாதத்தால் நின்னை எனக்குத்தந்து என்னை நீகொணடு அந்தம் ஒன்று இல்லா ஆனந்தம் யான் பெறச் செய்தாய். அதனால் யானே சதுரப்பாடுடையவன்'' என்பதாம்.

☐ ☐ ☐

## 18. "சித்தம் சிவனொடும் ஆட ஆட"

அப்பரடிகளும் ஞானசம்பந்தரும், தம் காலத்தில் தமிழகத்தில் பெரிதும் பரவியிருந்த சைனர் ஆதிக்கத்தை ஒழிக்க முற்பட்டவர்கள். அதனால் அவர்கள் பலவூர்களுக் கும் சென்று சைவசமயத்தைப் பரப்ப முற்பட்டனர். அதற்கு அவர்கள் மேற்கொண்ட செயல்—கையாண்ட உத்திகளுள் ஒன்று, ஊர்கள் தோறும் உள்ள சிவலிங்கப் பெருமானைத் தமிழில்பாடி மற்றவர்களையும் பாடச் செய்ததாகும். ஒவ்வோர் ஊருக்கும் பத்துப்பாடல்கள் கொண்ட பதிகத்தைப் பாடிவந்தனர். தாங்கள் பலநாள் தங்கிய அல்லது பலமுறை வந்த ஊர்களுக்குப் பல பதிகங் கள் பாடினர்.

அவர்களுக்கு முற்பட்ட மாணிக்கவாசகர் காலத்தில் சைனர்களை விட ஆசீவகரும், பௌத்தரும் தமிழகத்தில் அதிக ஆதிக்கம் பெற்றிருந்தனர். அவர்களை ஒடுக்கும் முயற்சியை மாணிக்கவாசகர் மேற் கொண்டார். அதனால் அவர்கள் மதக் கேட்பாடுகளைத் தம் பாடல்களில் மறுத்தும் சிவவழிபாட்டை வலியுறுத்தியும் வரலானார். அதற்காக அவர் பலவூர்களுக்கும் சென்றாலும் அப்பரடி களும் ஞான சம்பந்தரும் போலப் பயணமே தொழிலாகக் கொள்ளவில்லை. அதனால் அவர் ஆங்காங்கே ஊர்மக்கள் செயல்களைக் கண்டு அவற்றையே பொருளாக வைத்துத் திருவெம்பாவை, திருவம்பானை, திருவுந்தியார், திருத் தெள்ளேணம், திருப்பூவல்லி, திருப்பொன்னூசல் முதலிய பாடல்களைப் பாடுவாரானார். அவற்றுள் ஒன்றும் 'திருப்பொற் சுண்ணம்' என்பதுமாம்.

'பொற்சுண்ணம்' என்பது, பொன் போலும் பொடிய 'பொன்னிறப்பொடி' என்னும் பொருள் தரும். நறுமணப் பொருள்களைக் கூட்டி அதிகமாக மஞ்சளைச் சேர்த்து உரலில் இட்டுக்குற்றிக் கொள்வதே சுண்ணம் (பொடி) எனப்படும். எண்ணெய் தேய்த்து நீராடுவர். அது நீங்கப் பின்னர்ச் சிகைக்காய்த்தூள் தேய்த்து நீராடுவர். அவ்வாறே, இறைவனுக்கு நீராட்டு செய்யும்போது முதலில் எண்ணெய் நீராட்டு செய்வர். அடுத்து நறுமணச் சுண்ணத்தை நீரிற்கரைத்து நீராட்டுவர். இப்படி இறைவனை நீராட்டுதற்கு வேண்டிய சுண்ணம் தயாரிக்க, மாணிக்கவாசகர், மகளிரை அழைத்து, இன்னின்னது நிகழ இன்னின்னவாறு சுண்ணம் இடித்தல் வேண்டும். என்றார். தம்மையும் அம்மகளிருள் ஒருவராகமதித்து நாம் சுண்ணம் இடிப்போம் என்றார்.

சுண்ணம் இறைவனுக்காதலின், உலகவர் சுண்ணம் இடித்தல்போல் இல்லாமல்,

''வையகம் எல்லாம் உரல தாக
மாமேரு என்னும் உலக்கை நாட்டி
மெய்யெனும் மஞ்சள் நிறைய அட்டி
......பொற்சுண்ணம் இடித்தும் நாமே''
(திருப்பொற் சுண்ணம்)

பொற்சுண்ணம் இடிக்கும் மகளிரை அழைக்கும் போது சத்தி, சோமி, பார்மகள், நாமகள், சித்தி, கௌரி, பார்ப்பதி, கங்கை என அவர்களின் பெயரிட்டு அழைத்தார். அவர் காலத்து மகளிர் பெயர்களாக அவை வழங்கின வாதல் வேண்டும். (ஷ 1)

மகளிர் உலக்கையை வலக்கையிலும் இடக்கையிலும் மாறி மாறிப்பிடித்து மஞ்சள் இடிக்கும்போது உடல் ஆடுவது கண்டு, இன்னின்னவை இப்படியிப்படி ஆட நாம் சுண்ணம் இடிப்போம் என்றார்.

முத்தணி கொங்கைகள் ஆட ஆடப்
பொய்குழல் வண்டினம் ஆட ஆடப்
சித்தம் சிவனொடும் ஆட ஆடச்
செங்கயற் கண்பனி ஆட ஆடப்
பித்தெம் பிரானொடும் ஆட ஆடப்
பிறவி பிறரொடும் ஆட ஆட
அத்தன் கருணையொரு ஆட ஆட
ஆடப்பொற் சுண்ணம் இடித்தும் நாமே.

(செ 10) என்பது திருப்பொற் சுண்ணப்பாடல்களுள் ஒன்று. ''கொங்கைகள் தம்மேல் புரளும் முத்தும் மாலைகளோடு ஆடவும், கூந்தல் தன்னில் செருகப்பட்ட மலரில் மொய்க்கும் வண்டுகளோடு ஆடவும், நம் சித்தம் சிவனொடு ஆடவும், நம் கண்கள் மகிழ்ச்சியால் தாம் சொரியும் நீரோடு ஆடவும், மனப்பித்தம் சிவபிரானோடு ஆடவும், நம்பிறவியெல்லாம் நம்மை விட்டுப் பிறரொரு சேர்ந்து ஆடவும், சிவபிரான் நமக்கு அருளவேண்டித் தன் கருணையோடு (இறைவியோடு) ஆடவும் நாம் சுண்ணம் இடிப்போமாக'' என்பது அப்பாடலின் பொருள்.

அப்பாடலில் 'சித்தம் சிவனொடு ஆட,' பித்து எம்பிரா னொடும் ஆட, 'அத்தன் கருணையொடு ஆட, எனச் சிவபிரானை மூன்று முறை கூறியது ஏன்? சிவபிரான் தம்முடன் மூன்று நிலையில் இருந்து ஆடுவதாகக் குறிப்பிட்டாரா மாணிக்கவாசகர்?

சிவலிங்கத்தைச் சச்சையில் வைத்து மார்பில் அணிந் திருப்பதால் பொற்சுண்ணம் இடிக்கும்போது, அது ஆடுவது இயற்கை. அதனால் அச்சச்சை ஆடும்போது சிவபிரான் இட்டலிங்கப் பெருமான் நினைவு வரச்சித்தம் உடன் ஆடுவதாகும். அதனால், 'சித்தம் சிவனொடு (இட்டலிங்கத்தோடு) ஆட' என்றார் மாணிக்கவாசகர்,

சித்தத்தின் நினைவு முதிர்வால் தோன்றுவது பித்தம். பித்தம் உயிரைப் பற்றியது. பித்தவுயிர் உயிரினுள்ள இலிங்கத்தை (பிராணலிங்கத்தை) எண்ணிக் கொண்டிருக்கும். அதனால், 'பித்து பிராணலிங்கத்தோடு ஆட' என்றார்.

இவ்விரண்டுக்கும் மேற்பட்டது பாவனாலிங்கம் உயிரின் பித்தமுதிர்வுகண்டு இறைவன் அருள்புரிய முற்படுவான். அதனால் நமக்கெல்லாம் அருள்செய்ய இறைவன் கருணையோடு வெளிப்படுவன் என்பதற்காக அத்தன் கருணையொடு ஆட' என்றார்.

திருப்பொற்சுண்ண இறுதிப்பாட்டு.

வேதமும் வேள்வியும் ஆயி னார்க்கு
மெய்ம்மையும் பொய்ம்மையும் ஆயினார்க்குச்
சோதியு மாய்இருள் ஆயி னார்க்குத்
துன்பமும் இன்பம் ஆயி னார்க்குப்
பாதியு மாய்முற்றும் ஆயி னார்க்குப்
பந்தமு மாய்வீடும் ஆயி னார்க்கு
ஆதியும் அந்தமும் ஆயி னார்க்கு
ஆடபொற் சுண்ணம் இடித்தும் நாமே

(ஷை 20)

என்பதாகும். இப்பாடலில் கூறப்பட்ட இவ்விரண்டும் ஒன்றை ஒன்று மாறுபட்டன. மெய்—பொய், சோதி—இருள், இன்பம் துன்பம், முழுமை—பாதி, வீடு—பந்தம், ஆதி—அந்தம் என்பனவற்றுள், முன்னர்க் கூறப்பட்டன வேண்டுவன; பின்னர்க் கூறப்பட்டன வேண்டாதன. இந்த வரிசையில் முதலில் வேள்வியும் கூறப்பட்டன. வேதம் ஞான காண்டம் எனவும், வேள்வி கருமகாண்டம் எனவும் கூறப்படும். இறைவன் இப்படி மாறுபட்ட இருநிலையி லும் இருப்பான் என்பதை வைணவர்கள் 'விருத்த விபூதியன்' என்பர். மாணிக்கவாசகர் வேதத்தை

வேண்டுவதாகவும், வேள்வியை வேண்டாததாகவும் வைத்துக் கூறியதால் வேள்வி அவருக்கு உடன் இல்லை என்பது புலப்படும். பின்வருவது கருதத்தக்கது.

''எரியோம்பல் வீரசைவர்களுக்கு வேண்டுவதில்லை என வீரசைவத் தத்துவ விளக்கத்தில் நிபுணராகிய டாக்டர் நந்திமட் என்பவர் அறுதியிட்டுக் கூறியுள்ளார்'' (வித்துவான் சி. சோமசுந்தரம் M. A., L. T, ஐம்பெருங் குரவர் அகவல், முன்னுரை, பக்கம் 11 நூலாசிரியர். வித்துவான், மு. துரைசாமி, கீரம்பூர், திருச்சி)

□ □ □

# 19. புத்தனின் சிவ வணக்கம்

புத்தன் புரந்த ராதி அயன்மால் போற்றிசெயும்
சித்தன்; பெருந்துறை மேயபிரான் பிறப்பறுத்த
அத்தன்; அணிதில்லை யம்பலவன் அருட்கழல்கள்
சித்தம் புகுந்தவா தெள்ளேணம் கொட்டாமோ

(திருவாசகம், திருத்தெள்ளேணம் 16)

மேற்பாடலில் மாணிக்கவாசகர், சிவபிரானைப் புத்தன் போற்றி செய்ததாகக் கூறியுள்ளார். பின்னர் வரும் பித்தன் அத்தன் என்பனவற்றைப் போலப் புத்தன் என்பதும் 'புதுமையுடையவன்' என்னும் பொருளில் ஆளப்பட்ட குறிப்பு வினைமுற்று என்பர் ஒரு சிலர்.

''புத்தன் என்பது திருமாலைக்குறிக்கும். திருமால்
புத்தனாகத்
திரிபுரத்தவரிடம் சென்று புத்தமதத்தைப்
போதித்து அவரது
சிவபக்தியைப் போக்கியதனால் சூழ்ந்த
பெரும்பாவத்தைச்
சிவபூசை செய்து நீக்கிக் கொண்டான்
என்பது புராணம்''

என்று அருணை வடிவேல் கூறினார்.

(தருமபுர ஆதீன வெளியீடு 9-6-1966)

மாணிக்கவாசகர் திருமாலைப் பற்றிப் பலவிடங்களில் அவர் சிவபிரானைப் பன்றிவடிவில் சென்று காணாமை

யைச் கூறியுள்ளார். சிவபூசை செய்து சக்கரம் பெற்றதும், முப்புரம் எரித்த போது இடபதமாய்த் தாங்கியதும் கூறியுள்ளார். ஆனால் புத்தனாகப் பிறந்தது பற்றிக்கூற வில்லை.

புத்தன் என்பது திருமாலைக் குறித்தால் மீண்டும் மால் போற்றி செய்ததாகக் கூறுவது ஏன் என்பதற்கு முதலியார் அவர்கள், திருமால் புத்தனாகப் பிறந்த வரலாறு கூறிப் பின்னர்மால் எனக் கூறுதலின் கூறியது கூறல் இல்லை யென்றும் கூறினார்கள்.

புத்தனே சிவபிரானை வழிபட்டான் எனக்கூறுவதே மிகப் பொருத்தமாகும். அதற்குச் சான்று மறைமலையடி கள் கூறுவதைக் கொள்ளலாம்.

'கௌதம சாக்கியரும் மகாவீரரும் தோன்றிமுறையே புத்த சமண சமயங்களைத் தோற்றுவித்தற்கு முன் சாக்கிய வகுப்பினர் சிவபிரானையே வணங்கி வந்தனர் என்பது வடநாட்டிலுள்ள பழைய கல்வெட்டுகளின் ஆராய்ச்சியால் நன்கு புலனாகின்றது' (See Mr. H.Krishna Sastris South Indian I mages of gods and goddesses P. 73) என்றும்,

''கௌதம சாக்கியர் பிறந்தஞான்று, அவர் சிவபிரான் திருவருளைப் பெறுதற் பொருட்டுச் சிவபிரான் திருக்கோயிற்குப் பெற்றோரால் எடுத்துச் செல்லப் பட்டமை பழைய புத்த சமயக் கல்வெட்டு ஒன்றில் செதுக்கி வைக்கப்பட்டிருக்கின்றது'' (See Epigraphia Indica Vol V.P. 3)

என்றும் தமது, 'மாணிக்க வாசகர் வரலாறும் காலமும்' என்னும் நூலில் (பக்கம் 714 கழக வெளியீடு) எழுதியுள்ளார்கள்.

அடிகளின் எழுத்தைக் கொண்டு நாம் புத்தனே தொடக்க காலத்தில் சிவபிரானை வழிபட்டிருந்தானாகல் வேண்டும் எனக்கருதலாம்.

சாக்கியர் என்பார் கௌதமபுத்தர் காலத்துக்கு முற்பட்டவர்கள்; தமக்குத் தெய்வமாகப் புத்தன் என்பவனைக் கொண்டவர்கள். கௌதம புத்தருக்கு முன்பும் புத்தர் பலர் தோன்றியிருந்தனர் எனப் புத்த சமயத்தார் கூறுவர். அதனால் கௌதமபுத்தராகிய சாக்கியருக்கு முன்னிருந்த அல்லது அவர் துறவியாவதற்கு முன்வரையிருந்த சாக்கியர்கள் சிவபிரானை வழிபட்டவராவர் எனக்கருதலாம். கௌதமசாக்கியரை அவர் பிறந்த நாளில் பெற்றோர் சிவபிரான் கோயிற்கு எடுத்துச் சென்றதாகப் பழைய கல்வெட்டுக் கூறுவதால் அக்கருத்தைக் கொள்வதில் தவறாகாது.

மாணிக்கவாசகர் காலத்தில் கௌதம புத்தர் கொள்கையே வலுவடைந்து பரவியதால்—அதாவது கடவுள் இல்லை என்ற கொள்கை பரவியிருந்ததால், அவர் மதத்தை ஒடுக்க முற்பட்டவர் தம் பாடல்களில் அது பற்றிக் குறிப்பிட்டிருந்தாலும் கௌதம புத்தரின் முன்னோனாகிய புத்தன் சிவபிரானைப் போற்றி செய்ததையும் மேற்பாடலில் குறிப்பிட்டார்.

மேற்பாடலில் உள்ள புத்தன் கௌதம புத்தருக்கு முற்பட்டசாக்கியப் புத்தன் என்றும் ''புத்தன் முதலாய புல்லறிவிற்பல் சமயம்'' (திருத் தோணோக்கம் 6) என்னுமிடத்தில் உள்ள புத்தன் கௌதமபுத்தன் என்றும் கொள்ளுதல் வேண்டும்.

சாக்கியர் சிலருள் மாணிக்கவாசகர் காலத்தும் சிவபிரானை வணங்கி வந்தவர்களும் உண்டு. இதற்குப் பெரிய புராணச் சாக்கிய நாயனார் வரலாறும் சான்று பகரும்.

# 20. மாணிக்கவாசகர் கூறிய திருமால் கதை

மாணிக்கவாசகர் திருமாலின் செயல்களாகத் திருவாசகத்தில் மூன்றைக் கூறியுள்ளார். அவை,

1. சிவபிரானின் திருவடி தேடியது

2. சிவபூசை செய்து சக்கரம் அருளப்பெற்றது.

3. சிவபிரான் முப்புரம் எரித்த காலையில் இடபமாகத் தாங்கியது.

என்பன. சிவபிரானின் திருவடி தேடிய கதையைப் பல பாடல்களிற் கூறியுள்ளார். ''திருமாலும் பன்றியாய்ச் சென்றுணராத் திருவடி'' என்பது திருத்தெள்ளேண முதற் பாடலில் உள்ளது.

பங்கயம் ஆயிரம் பூவினில் ஓர் பூக்குறையத் தங்கண் இடந்தரன் சேவடி மேற் சாத்தலுமே சங்கரன் எம்பிரான் சக்கரம் மாற்கு அருளியவாறு எங்கும் பரவிநாம் தோணோக்கம் ஆடாமோ என்று திருத்தோணோக்கம் பத்தாம் பாடலில் சிவபூஜை செய்ததைக் கூறினார்.

இடபமாய்ச் சிவனைத் தாங்கியதைத் திருச்சாழல் பதினைந்தாம் பாடலில்,

கடகரியும் பரிமாவும் தேரும்உலகந் தேறாதே
இடயம் உகந் தேறியவா றெனக்கறிய இயம்பேடி
தடமதில்கள் அவைமூன்றும் தழல்எரித்த அந் நாளில்
இடபமாய்த் தாங்கினான் திருமால்காண் சாழலோ

எனப்பாடினார்.

மேற்கூறிய மூன்று செய்திகளேயன்றிச் சிவபிரானின் திருவடியைத் தேடிக் காணாத செய்தியின் தொடர்கதை போல் ஒரு கதையைத் தம் திருக்கோவையார் என்னும் நூலில் கூறியுள்ளார்.

திருமால் பன்றியாய் நிலத்தைத் தோண்டிச் சென்று இறைவன் திருவடியைக் காணாது மீண்டவுடன் இறைவனிடம், 'எந்தையே எனக்கு இரங்கி நின் திருவடியைக் காட்டியருள்க' என வேண்டியதாகவும், இறைவன் தனது ஒருதிருவடியைக் காட்டியதாகவும், மனம் வருந்திய திருமால், 'மற்றொரு திருவடியையும் காட்டியருள்க' என வேண்டித் தில்லைச் சிற்றம்பலத்தின் (நடராசப் பெருமான் முன்னர்) முற்றத்தில் வரங்கிடந்ததாகவும் கூறியுள்ளார்.

புரங்கடந் தானடி காண்பான் புவிவிண்டு புக்
கறியாது
இரங்கிடெந் தாயென் றிரப்பத்தன் னீரடிக்
கென்னீரண்டு
கரங்கள்தந் தானொன்று காட்டமற் றாங்கதுங்
காட்டிடென்று
வரங்கிடந் தான்தில்லை யம்பல முன்றிலம்
மாயவனே
(திருக்கோவையார் 86)

என்பது அவர்பாடல்.

திருமால் தில்லைச் சிற்றம்பல முன்றிலில் வரங்கிடந்தான் என்னும் கதை மாணிக்கவாசகர் கூறியிருப்பதாகி,

அவர் காலத்தில் அக்கதை வழங்கியிருத்தல் வேண்டும் என்பதும், அதற்கேற்பத்தில்லைச் சிற்றம்பல முன்றலில் திருமால் வரங்கிடக்கும் கோலத்தில் அவன் உருவம் அமைக்கப்பட்டுள்ளது என்பதும் அறியவரும்.

இன்று தில்லைச்சிற்றம்பல முன்றின் பக்கமாகத் திருமால் துயில்கொள்ளும் நிலையில் இருப்பதைக் காண்கிறோம். இத்திருமால் உருவத்தை அங்கு அமைத்தவன் கி.பி.710 முதல் 775 வரை ஆட்சி புரிந்த நந்திவர்வ பல்லவமல்லன் என்னும் பல்லவ அரசன் என்பர் ஆராய்ச்சியாளர். அதற்குச் சான்றாக,

> பைம்பொன்னும் முத்தும் மணியும் கொணர்ந்து
> படைமன்ன வன்பல்ல வர்கோன் பணிந்த
> செம்பொன் மணிமா டங்கள் சூழ்ந்த தில்லைத்
> திருச்சித்ர கூடம சென்று சேர்மின்களே
> (பெரிய திருமொழி 3-2.3)

என்னும் திருமங்கையாழ்வார் வாக்கைக் காட்டுவர் (பன்னிரு திருமுறை வரலாறு இரண்டாம் பகுதி பக்கம் 95)

நந்திவர்ம பல்லவ மன்னன் முதலில் சைவனாக இருந்தான் என்றும் பின்னர்த் திருமங்கையாழ்வார் போல்வரால் பரம வைணவனாக மாறினான் என்றும் அதனாலேயே நடராசப் பெருமான் முன்னரேயே திருமால் உருவமைத்து அவ்விடத்துக்குத் திருச்சித்திர கூடம் எனப் பெயர்வைத்தான் என்றும் கூறிப் பரமவைணவனாக மாறினான் என்பதற்குக் காசாக்குடி, உதயேந்திரம். தண்டந்தோட்டம், பட்டத்தான் மங்கலம் ஆகிய ஊர்களிற் கிடைத்த செப்பேடுகள் அறிவிப்பதாகவும் கூறுவர் (ஷை பக்-96) இது கொண்டு மாணிக்கவாசகர் நந்திவர்ம பல்லவ மல்லன் காலத்துக்குப் பிற்பட்டவர் என்றும் கூறுவர்.

நந்திவர்மபல்லவ மல்லன் பரமவைணவனாக மாறி னான் என்பதால் அவன் சிவவெறுப்பினன் என்பது பெறப் படும். அவன் அமைத்த திருமால் (கோவிந்தராசப் பெருமாள்) அமைப்பும் சான்று பகரும். தென்திசை நோக்கி யாடும் நடராசப் பெருமாள் பக்கமாகக் காலை நீட்டிப் படுத்த கோலத்தில் திருமால் உருவை அமைத்ததைக் காணும்போது அது புலப்படும்.

மாணிக்கவாசகர் காலத்தில் திருமால் நடராசப் பெருமானின் நேர் எதிரே முன்றிலில் வரங்கிடந்த நிலை யில் உருவம் அமைக்கப்பட்டிருந்திருக்க வேண்டும். பரம வைணவனாகிய அம்மன்னன் தன் சிவ வெறுப்பை வெளிப் படுத்தும் நிலையில் இன்றுள்ளவாறு திருமால் உருவை அமைத்தானாதல் வேண்டும்.

இன்றுள்ள வாறே தம் காலத்தும் திருமால் அமைப் பிருக்கக் கண்ட மாணிக்கவாசகர் தற்குறிப்பேற்றமாகத் திருகோவையார்ப் பாடலைப் பாடினார் எனக்கொள்ள லாமே எனின், மாணிக்கவாசகர் வாக்கு அப்படிக் கொள்ள இடந்தரவில்லை. திருமால் முன்றிலில் வரம் கிடந்ததாக அவர் கூறினார். முன்றிலில் வரம் கிடப்பவன் தன்னை நேரே காணுமாறு கிடப்பானேயன்றி ஒதுங்கிக் கிடவான்.

திருச்சித்திரக் கூடத் திருமால் நடராசப் பெருமானுக்கு நேரே கிடவாமல் ஒதுங்கிக் கிடப்பதைக் காணலாம். இக்கிடக்கை வரங்கிடக்கும் கிடக்கையும் இல்லை. தில்லைவாழ் மக்கள் எதிர்ப்புக் காரணமாகப் பல்லவ மன்னன் முன்றலின் நேரே திருமாலை அமைக்காமல் ஒரு பக்கமாக அமைத்திருத்தல் வேண்டும்.

எனவே திருமால் வரங்கிடந்த கதை பல்லவ மன்னன் காலத்திருந்து வழக் கொழிந்திருத்தல் வேண்டும் எனக் கொள்ளலாம். இதனால் மாணிக்கவாசகர் காலம் கி.பி. எட்டாம் நூற்றாண்டிற்கு முற்பட்டது என்பதும் பெறப்படும்.

☐ ☐ ☐

# 21. தில்லைவாழ் அந்தணர்

''தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்'' என்பது, சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிய திருத்தொண்டத் தொகையின் முதற்பாடலின் முதலடியில் உள்ளது. தில்லைவாழ் அந்தணர் என்பவர் யாவர்?

சுந்தரர், தம் திருத்தொண்டத் தொகையில் தொகையடியார்களாகப் பத்தராய்ப் பணிவார், பரமனையே பாடுவார், சித்தத்தைச் சிவன் பாலே வைத்தார்; திருவாரூர்ப் பிறந்தார், முப்போதும் திருமேனி தீண்டுவார், முழுநீறு பூசிய முனிவர். அப்பாலும் அடிச்சார்ந்தார் என எழுவரைக் கூறியுள்ளார். இவர்களுடன் தில்லைவாழ் அந்தணர், பொய்யடிமையில்லாத புலவர் இருவரையும் சேர்த்து ஒன்பதின்மர் என்பர். முதல் எழுவரையும் ஒரே பாடலில் கூறிய சுந்தரர், தில்லைவாழ் அந்தணரை முதல்பாடலின் முதலிலும், பொய்யடிமையில்லாத புலவரை ஏழாம் பாடலிலும் தனித்தனியாகக் கூறியிருத்தலினால் பின்னவர் இருவரையும் தனியடியார்களாகக் கொள்ளல் ஆகாது. மறைமலையடிகள் போல்வார் பொய்யடிமையில்லாத புலவர் மாணிக்கவாசகரே எனக் கொண்டனர். அந்த வகையில் தில்லைவாழ் அந்தணரும் தொகையடியாராகாமல் தனியடியாராகவே அமைவர் என்னவாம். அவராவார் தில்லையம்பலக் கூத்தப்பிரானே யாவார். அவரே தில்லைவாழ் அந்தணர். நாயன்மார் வரலாறுகளில் சிவபிரான் அந்தண அடியவர் வடிவத்தில் வந்ததையறிகிறோம். அடியவர் வேடத்தில் வந்து சிவனடி

யார்களை அவர் வணங்கியதையும் வரலாறுகள் தெரிவிக்கும்.

கூத்தப்பிரானை முதல்வனாகக் கொண்டு அவனொடு சேர்ந்து மூவாயிரம் அந்தணர் தில்லையில் வாழ்ந்தனர். அவர் தில்லை மூவாயிரவர் எனப்பட்டனர். மாணிக்க வாசகர் ''தில்லையம்பலத்து மூவாயிரவர் வணங்க நின்றோன்'' எனத்தமது திருக்கோவையாரில் (72) கூறியது காணலாம். மூவாயிரவர் எனும் எண்ணிக்கை சேக்கிழார் காலத்தும் (கி. பி. 12 ஆம் நூற்றாண்டு) கூறப்பட்டு வந்துளது. ''செம்மையால் தணிந்த சிந்தைத் தெய்வ வேதியர்களானார் மும்மை ஆயிரவர்'' என்பது அவர் வாக்கு (தில்லைவாழந்தணர் புராணம் 8)

மாணிக்கவாசகர் காலத்தில் நடராசப் பெருமான் முன்னர்த் தவம்கிடந்த திருமாலை இரண்டாம் நந்திவர்மன் எனும் பல்லவவேந்தன் (கி. பி. 710—775) ஒரு பக்கமாகப் படுத்த திருக்கோலத்தில் அமைத்துச் திருச்சித்திரகூடம் என அவ்விடத்துக்குப் பெயர் வைத்து வழிபட்டான் என்பது வரலாறு. (மாணிக்கவாசகர் கூறிய திருமால்கதை, வீரசைவ முகசு 1—1—1961) நந்திவர்மபல்லவன் காலத்தில் வாழ்ந்தவர் திருமங்கையாழ்வார் அவர்.

மூவாயிர நான்மறை யாளர் நாளும்
முறையாக வணங்க அணங்காய சோதி
தேவாதி தேவன் திகழ்கின்ற தில்லை
திருச்சித்ர கூடம் சென்று சேர்மின்களே
(பெரிய திருமொழி 3—28)

என்று மூவாயிரவர் அந்தணர் கோவிந்தராசப் பெருமாளை வழிப்பட்டமையைக் கூறினார். குலாசகர ஆழ்வாரும் தமது பெருமாள் திருமொழியில்,

தில்லைநகர்த் திருச்சித்ர கூடந்தன்னுள்
அந்தணர்கள் ஒருமூவாயிரவர் ஏத்த
அணிமணியா சனத்திருந்த அம்மான் தானே.

(பெருமாள் திருமொழி 10—12)

என்று தில்லை மூவாயிரவர் பற்றிக் கூறினார். தில்லை மூவாயிரவர் நடராசப் பெருமானை வழிப்பட்டனர் எனச் சைவ அடியார்களும், கோவிந்தராசப் பெருமாளை வழிபட்டனர் என வைணவ ஆழ்வார்களும் கூறுவதால் அவ்வந்தணர்களே கடவுளர் இருவரையும் வழிபட்டனராதல் வேண்டும் என்பர் (திரு. கோ. மு. முத்துசாமி பிள்ளை, தில்லைச் சிற்றம்பல வாணர் திருக்கோயில் பக்கம் 41—1987). இரண்டாம் நந்திவர்மபல்லவனுக்கு முன்னர்த் தில்லையில் கோவிந்தராசப் பெருமாளுக்குத் திருச்சித்ர கூடம் அமைக்கப்படவில்லை; அமைந்திருந்ததாக ஆதாரமும் இல்லை என்றும் கூறுவர் அவர் (ஷை பக். 41)

அப்படியாயின் இரண்டாம் நந்திவர்மபல்லவன் காலத்திற்குப் பின்னர் மாணிக்கவாசகர் இருந்தார் என்றால், தில்லை மூவாயிரவர் பற்றித் திருக்கோவையாரில் குறிப்பிட்டிருக்க மாட்டார். ஏன் எனின், திருமாலை வழிபடுபவர்களை அவர் வெறுத்தவராவார்.

புற்றில்வாள் அரவும் அஞ்சேன் பொய்யர்தம்
மெய்யும் அஞ்சேன்
கற்றைவார் சடையெம் அண்ணல் கண்ணுதல்
பாதம் நன்றி
மற்றிமோர் தெய்வந்தன்னை உண்டுஎன
நினைந்துஎம் பெம்மான்
கற்றிலா தவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சுமாறே

என்பது அவர் வாக்கு.

இரண்டாம் நந்திவர்ம பல்லவன், தன் காலத்திருந்த நடராசப் பெருமானை வழிபட்டு வந்த தில்லை மூவாயிரவர் போலவே கோவிந்தராசப் பெருமானை வழிபடுதற்கென மூவாயிரவர் (வைணவ) அந்தணர்களைப் பல்வேறிடங் களிலிருந்து கொண்டு வந்து நிறுத்தியவனாதல் வேண்டும் ஏன்எனின் அவன் பரமவைணவன் நடராஜப் பெருமா னைப் பூசிக்கும் அந்தணர்களையே கோவிந்தராசப் பெருமாளையும் பூசிக்க உளம் கொள்ளமாட்டான். அல்லது நடராசப்பெருமானைப் பூசித்த அந்தணர் களையே கோவிந்தராசப் பெருமாளையும் பூசிக்கச் செய் தான் எனின், மாணிக்கவாசகர் அவ்வந்தணர்களைக் கூறி யிருக்கமாட்டார். நடராசப் பெருமானையேயன்றித் திருமாலையும் அவர்கள் பூசித்தனர் என்பதால் அவர் களைக் கண்டு அஞ்சியிருப்பார். அவர்களைக் கற்றிலாத வர் என்றே இகழ்ந்திருப்பார்.

எனவே மாணிக்கவாசகர் கி. பி. 8 ஆம் நூற்றாண் டுக்கு முற்பட்டவர் என்பதில் ஐயமில்லை.



## 22. தேன் அன்ன தண்ணீர்

பா தோதகம்

---

வழங்குகின் றாய்க்குன் அருளார்
அமுதத்தை வாரிக் கொண்டு
விழுங்கு கின்றேன் விக்கினேன்
வினையேன் என்விதி யின்மையால்
தழங்கருந் தேனன்ன தண்ணீர்
பருகத்தந் துய்யக் கொள்ளாய்
அழுங்கு கின்றேன் உடையாய்
அடியேன் உன் அடைக்கலமே.

(அடைக்கலப்பத்து - 10)

இப்பாடல் திருவாசக அடைக்கலப்பத்தில் உள்ளது. இதில் உள்ள 'தேன் அன்ன தண்ணீர்' என்பது யாது எனக் காண்பதே இக்கட்டுரையின் நோக்கம் ஆகும்.

"என்னை ஆளுடையவனே! நின் அருளாகிய நிறைந்த அமுதத்தை எனக்கு வழங்குகின்றாய்; வழங்கும் உனக்கு யான் யாது செயவல்லேன்; அவ்வமுதத்தை வாரிக் கொண்டு வாயார விழுங்குகின்றேன்; அவ்வமுதம் உள் செல்லுமுன் விக்கல் கொண்டேன். அதற்குக் காரணம் ஆர விழுங்கும் விதியில்லாதவனானேன்; தீவினையினேன்; அவ்விக்கல் தீர்ந்து அவ்வமுதம் உள்ளே செல்லுமாறு தேன் போலும் தண்ணீரை யான் பருகுமாறு தந்து என்னை உய்யுமாறு ஆட்கொள்ளுவாய்; அடியேன் உன் அடைக்கலம்"—என்பது இப்பாடலின் பொருள்.

உண்ணும்போது உணவு உட்செல்லத் தடையேற் படின் விக்கல் வருவது இயற்கை உடனே தண்ணீர் பருகி னால் உணவு உட்செல்லும். மாணிக்கவாசகர் தம் குருமணியின் (சிவபிரானின்) அருளாகிய அமுதை வாரி விழுங்கும்போது உலக உணர்வு தடைப்படுத்தத் தயக்கம் ஏற்பட்டது. அதைப் போக்க வேண்டிக் குருமணியிடம் தண்ணீர் வேண்டுகிறார். அத் தண்ணீர் தேன் போன்றது. தேனானது உடல் நோய் நீக்கித் திடம்பெறச் செய்வது. அதுபோன்று குருமணிதரும் தண்ணீரும் உயிரைப் பற்றும் நோயைப் போக்கி இறையருள் பெறுதற்குரிய நிலையை உண்டாக்கும். அதனால் அத் தண்ணீரை வேண்டினார் மாணிக்கவாசர்.

குருமணி தரும் தண்ணீர் என்பது யாது?

வீர சைவ சமயச் சாத்திரம் வீர சைவனுக்கு எண் வகைக் காப்புக் கூறும். அவை அட்டாவரணம் எனப்படும். குரு, இலிங்கம், அடியவர் (சங்கமம்) திருநீறு, உருத்தி ராக்கம், மந்திரம், தீர்த்தம், பிரசாதம் என்பன அவ் வெட்டு.

மாணிக்கவாசகர் கோகழியாண்ட குருமணி (சிவ புராணம் - 3) எனத் தம் குருமணியைக் கூறினார். பல தலங்களின் இறைவனைப்பற்றி (இலிங்கம்பற்றி) கூறி னார். அடியார் நடுவுள் இருக்கும் அருளைப்புரியாய் (கோயில் மூத்தத் திருப்பதிகம் - 1) என அடியவர் பற்றிக் கூறினார். ''சிவாயநம எனப் பெற்றேன்'' (திருவே சறவு - 10) என மந்திரம் கூறினார். ''தன்னீறு எனக் கருளி'' (திருப்பொன்னூசல் - 3) எனத் திருநீறு கூறினார். உருத்திராக்கம் எவ்விடத்தும் கூறினாரில்லை. அதனால் அவர்கள் காலத்தில் தமிழகத்தில் உருத்திராக்கம் சிவபிரா னின் அடையாளப் பொருளாகக் கருதப்படவில்லை எனக் கருதலாம். இறைவனின் திருவருட்பேறு கூறியவிடமெல் லாம் பிரசாதம் கூறினார் எனக் கொள்ளலாம். தீர்த்தம்

பற்றி மேற்பாடலில் வரும். 'தேன் அன்ன தண்ணீர் பருகத்தந்து' என்றதன் வாயிலாகக் கூறினார் எனக் கொள்ளலாம்.

தீர்த்தம் என்பது பாதோதகம் எனப்படும். வீர சைவன் தன் குருவின் திருவடிகளுக்குச் சிவபூசை முறையி லேயே நீராட்டு (அபிடேகம்) செய்து அத்திருவடி நீரினை உட்கொள்ளுதல் வேண்டும் என்பதும், அந்நீரைக் காத்து வைத்து உணவுப் பொருள்களில் தெளித்த பின்னரே சமைத்து உண்ணுதல் வேண்டும் என்பதும் வீர சைவ சாத்திரம் கூறும் கோட்பாடாகும்.

மாணிக்கவாசகர் தேனன்ன தண்ணீர் பருகத் தருமாறு வேண்டியது. அத்தீர்த்தத்தையே (பாதோதகத்தையே) என்னலாம். அருளாகிய அமுதம் உண்ணும்போது விக்கல் வரத் தண்ணீர் பருக வேண்டியவர், தேன் அன்ன தண்ணீர் என்றாரே தவிர அருளாகிய அமுதம் என்றதுபோல இன்ன தாகிய தண்ணீர் என உருவக நிலையில் கூறவில்லை. அதனால் திருவடி நீரையே குறித்தார் மாணிக்கவாசகர் என்னலாம்.

திருக்கோயிலில் இறைவனுக்கு நீராட்டு செய்யும் காலத்தில் அந்நீர் வெளியில் வந்து விழுமிடத்தில் மக்கள் அந்நீரைப் பிடித்துத் தலையில் தெளித்துக் கொண்டும் வாயில் பருகிக் கொண்டும் செல்வதை இன்றும் காண லாம். இப்பழக்கம் குருவின் திருவடி நீரைப்பருகிய வீர சைவனின் வழக்கத்தை அடிப்படையாகக் கொண்டது என்னலாம்.

தேவாரங்களில் காணப்படும் கருத்துக்களைக் கொண்டே பிற்காலத்தில் சைவ சித்தாந்த சாத்திரங்கள் எழுதப்பட்டன போலவே, மாணிக்கவாசகர் திருவாசகத்

திலுள்ள கருத்துகளும் பிற வீர சைவசமயப் புலவர் எழுதிய இலக்கியங்களிற் காணும் கருத்துகளும் கொண்டே வீர சைவ சமய சாத்திரம் எழுதப்பட்டது என்னலாம்.

''தேனன்ன தண்ணீர்'' என்று மாணிக்கவாசகர் கூறியது வீர சைவர் கொள்ளும் திருவடி நீரை (பாதோ கத்தை) குறிக்கும் என்பதில் தவறில்லை.

